# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
27.5.2007 ரூ.8.00
80 பக்கங்கள்









# தி. மு. க.



+16
இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்

## கை மணக்கும் கலை!

அன்னை ஃபாத்திமா காலேஜ், மதுரை

அடுத்த இதழ்...

# +16

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

3.6.2007

# விண்ணை நோக்கி விஜயா வங்கி!






# விமான விபத்தும் கழுதை கடித்தும்...

"தாத்தாவோட தொணதொணப்பு தாங்கவே முடியலடா" என்று அலுத்துக்கொண்டே வண்டியை விட்டு இறங்கினான் கிருஷ்ணா.

"அப்படி தாத்தா என்னதாண்டா சொன்னாரு?" என்று கேட்டேன்.

"என்ன சொல்லுவாரு, அதே பழைய கதைதான். அந்தக் காலத்துல மிலிட்டரியில வேலை பார்த்தது, கேம்ப்ல ஆமை வடை சுட்டது... பெரிசுக்கு வேற வேலையே இல்லை" என்று சொல்லிக்கொண்டே கையிலிருந்த புத்தகத்தால் தலையில் அடித்துக் கொண்டான்.

"எங்கேடா சுட்டே இவ்வளவு புத்தகத்தையும்?"

"இது ஒண்ணும் சுட்ட புத்தகமில்ல... வர்ற வழியில ஹேமா குடுத்து அனுப்பிச்சா. அவ அக்காகிட்ட தரணுமாம்" என்றான், அலுத்துக் கொள்ளவே ஜன்மம் எடுத்த கிருஷ்ணா.

புத்தகங்கள் என் கைக்கு மாறின. கவர்ந்தது 'கேட்டதும் கிடைத்ததும்'. புரட்டினேன்.

"தாத்தா புலம்பறார்னு சொன்னியே. இந்தப் புத்தகத்த படிச்சுப் பாரு. அப்புறம் தாத்தாவைப் புரிஞ்சுண்டு கொண்டாடுவே. ரா.கி. ரங்கராஜனோட அனுபவங்களின் தொகுப்பு இது. இந்தச் சின்னச் சின்ன கட்டுரைகள் இலவச லோக்கல் டைம்ஸ்ல வந்ததுதான். எத்தனை புதுப்புது விஷயங்கள். விமான விபத்துக்களில் இறந்தவர்களை விட கழுதை கடித்து, மிதித்து தள்ளி இறந்தவர்களின் எண்ணிக்கை அதிகமாம்..."

அண்ணன் - தங்கை சண்டையிலிருந்து தப்பித்து ஓடி வந்த ஜமுனா, என் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்து "ஹேய் இந்தப் புத்தகத்தை ஏற்கெனவே படிச்சாச்சு, உயிர்மை வெளியீடு" என்றாள். அவள் சொன்ன புத்தகம் 'பெருஞ்சுவருக்கு பின்னே'. சீனத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்க்கப்பட்ட நூல். மொழி பெயர்த்தவர் ஜெயந்தி சங்கர்.

"நம்ம நாட்டைவிட படுமோசம்ப்பா சீனாவுல பெண்களோட நிலைமை. வியோனிங்க் சிறையில் உள்ள பெண் கைதிகளில் பத்து சதவிகிதம் பேர், குடும்ப வன்முறை தாங்காமல் தங்கள் கணவன்மார்களைக் கொன்னுட்டாங்கங்கற செய்தி அதிர்ச்சியா இருக்கு" என்றாள் ஜமுனா.

"இன்னும் வேறே என்னம்மா படிச்சே இதிலே?" என்றேன்.

"விகடன் பிரசுரம் வெளியிட்டிருக்குற 'தொழில் தொடங்கலாம் வாங்க' பணம் சம்பாதிக்க எத்தனை பாதைகள் நம்ம முன்னால இருக்குன்னு பிரமிக்க வைக்கிற கட்டுரைகளின் தொகுப்பு."






''அதென்ன, ஏதோ மந்திரம்னு ஒரு புக் இருக்கு'' என்றான் கிருஷ்ணா.

'திருமந்திரம் ஒரு எளிய அறிமுகம்ங்கிற இந்தப் புத்தகத்துல ரொம்பக் கனமான விஷயத்தை எளிமையா விளக்கியிருக்காங்க முனைவர் சிவப்பிரியா. திருப்பதி, சிவன் கோயிலாக இருந்து பெருமாள் கோயிலாக மாற்றப்பட்ட தகவலை ஆதாரத்தோடு விளக்கியிருக்கிறார்.'' என்றேன் நான்.

''இந்த புஸ்தகங்களை எங்கிட்ட கொடுங்க. நான் ஹேமா ஆன்ட்டிகிட்ட ரெண்டு நாள் கழிச்சித் தந்துடறேன்'' என்றாள் ஜெயந்தி.

''தப்பிச்சேன். கூரியர் வேலை மிச்சம்'' என்றான் கிருஷ்ணா.

**- ஜோல்னா பையன்**

- திருமந்திரம் ஒரு எளிய அறிமுகம் - முனைவர் சிவப்பிரியா; ரூ.100/- சந்தியா பதிப்பகம், சென்னை - 83
- பெருஞ்சுவருக்குப் பின்னே-ஜெயந்தி சங்கர் ரூ.120/- உயிர்மை பதிப்பகம், சென்னை - 18
- கேட்டதும் கிடைத்ததும் - ரா.கி.ரங்கராஜன்; ரூ.90/- திருவரசு புத்தக நிலையம், சென்னை - 17
- தொழில் தொடங்கலாம் வாங்க; ரூ.55/- விகடன் பிரசுரம், சென்னை - 2.





# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**
தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**
தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324
தொலைநகல் :
044 - 2225 1021
மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 **யு.எஸ். டாலர்**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

“இதுவே நான் போட்டியிடும் கடைசித் தேர்தல். அரசியலிலிருந்து ஓய்வு பெறப் போகிறேன்'' என்று 2001-ல் பிரசாரம் செய்த கலைஞர் கருணாநிதி, 2006 தேர்தலில் மீண்டும் போட்டியிட்டு, முதல்வரும் ஆனார்!

இன்று தி.மு.க.வில் நிலவும் ரண களத்தைப் பார்க்கிறபோது, தமது இடத்தைப் பிடிக்க வாரிசுத் தகராறு எழும் என்ற அச்சத்திலேயே அவர் ஓய்வு பெறுவது குறித்த தமது முடிவை மாற்றிக் கொண்டு மீண்டும் முதல்வர் பொறுப்பை ஏற்றிருப்பாரோ என்று கருதத் தோன்றுகிறது!

உட்கட்சித் தேர்தல், முறையான செயற்குழு, பொதுக்குழுக் கூட்டங்கள், அவ்வப்போது எழுச்சியூட்ட மாநில மாநாடுகள், வளரும் இளைய தலைமுறைத் தலைவர்கள் என்று தி.மு.க.விடம் பல ப்ளஸ்கள் இருந்தும் குடும்பச் சிக்கல் என்ற மிகப்பெரிய மைனஸ் அதன் எதிர்காலத்தைக் கேள்விக்குறியாக்கிவிட்டது.

என்னதான் சுறுசுறுப்பும் நெஞ்சுரமும் படைத்தவரென்ற போதிலும் கலைஞர் நிரந்தரமாக தி.மு.க. தலைவராக இருக்க முடியாது. ஆரோக்கியமான போட்டியின் மூலம் அடுத்த தலைவர் உதயமாக வழியின்றிப் போயிருப்பது தி.மு.க.வுக்கு மட்டும் அல்ல; தமிழகத்துக்கும் நல்லதல்ல.

மூத்த பத்திரிகையாளர் ஞாநியும் இதைத்தான் சொல்கிறார்:

''தமிழ்நாட்டில் வலுவான ஜனநாயகம் நிலவ தி.மு.க. போன்ற கட்சிகள் பலவீனம் அடையாமல் இருப்பது அவசியம். ஆனால், கலைஞரின் குடும்பம் கட்சியைப் பலவீனப்படுத்திவிட்டது. இதற்குக் காரணம் ஸ்டாலின், தயாநிதி, அழகிரி மட்டுமல்ல; இவர்களையெல்





# தி.மு.க ?

லாம் ஊக்குவித்து வளர்த்த கலைஞரும்தான்! கட்சியின் அதிகார மையங்கள் குடும்பத்துக்குள் இருப்பதால் குடும்பத்துப் பிரச்னை கட்சியைப் பாதிக்கிறது. குடும்ப உறுப்பினர்கள் தங்கள் நிலையைக் காபந்து செய்து கொள்வதிலேயே குறியாக இருக்கிறார்கள். தி.மு.கழகம் சிதறுண்டு போவதற்கு முன்னால் அதை மீட்க கலைஞர் முயற்சி செய்ய வேண்டும். பெரியார், அண்ணா காலத்தில் இருந்தது போல்-குடும்ப ஆதிக்கம் இல்லாத தி.மு.க.வை மீண்டும் மலரச் செய்ய அவர் முயற்சி செய்ய வேண்டும். குடும்பத்திடமிருந்து கட்சியைக் காப்பாற்ற வேண்டும்.''

**தயாநிதி மாறனின் திடீர் வளர்ச்சி, கழகத்தில் பலருக்குப் பிடிக்கவில்லை!**

குடும்பச் சண்டை ஒரு பக்கம் இருந்தாலும், தயாநிதி மாறனின் திடீர் வளர்ச்சி, கழகத்தில் பலருக்குப் பிடிக்கவில்லை என்பதும் இன்றைய நிலைமைக்குக் காரணம்!

தி.மு.க. நிர்வாகக் குழு கூடியபோது, ''தயாநிதி மாறனின் பதவி பறிக்கப்பட வேண்டும்'' என்று சில உறுப்பினர்கள் கோபமாக 'டிமாண்ட்' வைத்திருக்கிறார்கள். இத் தகவலை நம்மிடம் சொன்ன முக்கிய தி.மு.க. பிரமுகர் ஒருவர், ''சன் நிறுவன ஊழியர்கள், சொத்துக்கள் பாதுகாப்புக்காக தயாநிதி உள்துறைச் செயலாளருடன் பேசியதில் என்ன தவறு?'' என்றும் கேட்டார்.

'எம்.பி.சீட் கொடுத்த பிறகுதான் அடிப்படை உறுப்பினராக ஆனார் தயாநிதி என்று பலர் கடுப்பில் இருக்கிறார்களே?' என்றதற்கு, ''அப்படியெல்லாம் சொல்வது தலைவர் பேரிலேயே குற்றம் சாட்டுவது ஆகும்'' என்று பதிலளித்தார் அந்தப் பிரமுகர்.

எனினும், அரசியலில் அடிமட்டத்

யதாகச் சொல்கிறார்கள். இதனை தி.மு.க. தலைமை கண்டித்த போதிலும் கலைஞ ரால் ஓரளவுக்கு மேல் கோபித்துக் கொள்ள முடியவில்லை; பாசம் தடுத்து விட்டது என்றும் சொல்கிறார்கள்.

இது தவிர, சன் குழுமத்துப் பங்கு களை கலைஞர் குடும்பத்தினர் விற்ற போது, மிகவும் குறைத்து மதிப்பிட்டே பணம் தந்ததாக ஒரு செய்தி அடிபடு கிறது. இதனாலும் பிளவு அகண்டு போனதாகத் தெரிகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக, ஸ்டாலி னின் பிறந்த தினமான மார்ச் ஒன்றாம் தேதி அன்று தினகரன் முதல் பக்கத்தில் ஒரு குரங்கின் படத்தை வெளியிட்டு - 'இன்று இதற்குப் பிறந்தநாள்' என்று கேப்ஷன் தந்தது கோபாலபுரத்தில் எரி மலையைக் கிளறிவிட்டிருக்கிறது.

கனிமொழி முன்னின்று நடத்திய சென்னை சங்கமத்தை சன் குழுமம் அவ் வளவாகக் கண்டுகொள்ளாதது, மதுரை தினகரனில் அழகிரி தொடர்பான செய் திகள் பின்னுக்குத் தள்ளப்பட்டது என்று மனஸ்தாபங்களுக்குக் காரணங்கள் பல சொல்லப்படுகின்றன.



தில் உழைக்காத ஒருவருக்கு எம்.பி. சீட் மட்டுமின்றி மத்திய அமைச்சர் பதவியும் தரப்பட்டதை நீண்ட கால தி.மு.க. தொண்டர்கள் பலரால் ஜீரணிக்க முடிய வில்லை என்பதே உண்மை.

ஆனால், தயாநிதி மாறன் அமைச்ச ராக்கப்பட்டது சன் குழுமத்தின் வளர்ச் சிக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் உதவியிருப்பது கண்கூடு.

கலைஞரேகூட ''மாறன் பசங்க பூர்ஷ் வாவாக ஆகிவிட்டாங்க'' என்று நிர்வா கக் குழு கூட்டத்தில் வருத்தப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

2004-ல் அமைச் சரான தயாநிதி மாறன், 2006 சட்டமன்றத் தேர் தல் அறிவிக்கப்பட்ட பிறகு ஆக்ஷனில் இறங் கியிருக்கிறார். தமக் கென ஓர் ஆதரவாளர் கூட்டத்தை உருவாக்கிக் கொள்ளும் நோக்கில், சில வேட்பாளர்களுக் குச் சொந்தப் பணத் தைத் தந்து அவர் உதவி


* ஞாநி

கூட்சிக்குள் (குடும்பத்துக்குள்?) தயா நிதி மீதும் மாறன் கிளை மீதும் வெறுப்பு வளர இவையெல்லாம் காரணம் என் றால் கட்சிக்கு வெளியே, மீடியா இண்டஸ்ட்ரி யிலும் சன் குழுமம் நட்பைச் சம்பாதித்துக் கொள்ளவில்லை. ஒரு ரூபாய்க்கு பேப்பர் தந்து விலை யுத்தத்தை (price war) தொடங் கியதால் பிற பத்திரிகை அதிபர்கள் அதிருப்தி அடைந்தனர். கூட் டணிக் கட்சியான பா.ம.க.வுக்கோ நிலை

**கலைஞர் குடும்பத்துப் பெண்கள் சமாதான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்களாம். தயாநிதியை விரைவிலேயே கலைஞர் மீண்டும் 'உச்சி முகந்து' அரவணைத்துக் கொள்வார் என்றும் சில தி.மு.க. பிரமுகர்கள் சொல்கிறார்கள்!**



யன்ஸை ஆதரித்துப் பேசிய தயாநிதி மீது கடுங்கோபம். அதுவுமின்றி அன்புமணியுடன் அவரை ஒப்பு நோக்கி 'சர்வே' வெளியிட்டு தயாநிதியே 'பாபுலர்' என்று முடிவு சொன்னதில் ஆதங்கம்.

மொத்தத்தில் தயாநிதி மாறனும் சன் குழுமமும் தங்கள் போக்கினாலும் நோக்கினாலும் விரோதம் சம்பாதித்துக் கொண்டார்கள்.

**ம**துரை வன்முறையைக் கண்டு தினகரன் நிர்வாகம் திகைத்துப் போய் விட்டது. ஏதோ சலசலப்பு இருக்கும் என்று எதிர்பார்த்த இடத்தில் உயிர்ச் சேதம், பொருட்சேதத்துடன் உறவுச் சேதமும் ஏற்பட்டுவிட்டது.

மதுரையில் நடந்த வன்முறையை போலீஸ் அனுமதித்து நின்றதைப் பார்த்த பிறகு, தமிழக மக்கள் தி.மு.க. தலைமையிடம் என்ன நம்பிக்கை வைக்க முடியும்? முதல்வரே உள்துறைக்குப் பொறுப்பு, மு.க.அழகிரியை வளர்த்து விட்டதற்கும் பொறுப்பு! இனி எதை அல்லது யாரை நம்பி இக் கட்சியை ஆதரிப்பது என்கிற நியாயமான சந்தேகம் மக்கள் மனத்தில் எழுவதைத் தவிர்க்க முடியாது.

ஆனால், ''இந்தப் பிரச்னையால் தி.மு.க.வுக்கு எந்தப் பாதிப்பும் இல்லை. எதிர்காலத்தில் ஸ்டாலின் - அழகிரியிடையே மோதல் வரும் என்று நினைத்துக் கொண்டிருக்கையில் இப்படி ஒரு பிரச்னை தோன்றி அவர்களை ஒன்றுபடுத்திவிட்டது'' என்கிறார் அரசியல் கட்டுரையாளர் சோலை.

''சன் குழுமம்தான் தி.மு.க.வால் ஆதாயம் கண்டு வருகிறதே தவிர, தி.மு.க.வுக்கு சன் குழுமத்தால் பெரிய இலாபம் இல்லை'' என்பதும் இவர் கருத்து!

**இ**தற்கிடையே கலைஞர் குடும்பத்துப் பெண்கள் சமாதான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்களாம். தயாநிதியை விரைவிலேயே கலைஞர் மீண்டும் 'உச்சி முகந்து' அரவணைத்துக் கொள்வார் என்றும் சில தி.மு.க. பிரமுகர்கள் சொல்கிறார்கள்.

2001-ல் கட்சியிலிருந்து நீக்கப்பட்ட மு.க.அழகிரி, கோபத்தில் ஒன்பது தி.மு.க. வேட்பாளர்கள் தோல்வியுற வேலை செய்தார்! அவரையே மன்னித்து கட்சியில் சேர்த்துக்கொண்டதோடு, மதுரையில் இப்படி நடந்ததே என்று தட்டிக்கூடக் கேட்காமல் பேசாமலிருக்கிறார் கலைஞர்; தயாநிதி மாறனை மன்னித்து ஏற்பது இதைக்காட்டிலும் கஷ்டமான காரியமில்லை!

ஆனால், குடும்ப அரசியலின் அதிர்வுகளுக்கு தமிழகத்தின் நலனைக் காவு கொடுப்பதை மக்கள் மன்னிக்க வேண்டுமே!

**- ப்ரியன்**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி**

தனித்தனியாய் நிறமும், மணமும் சுவையும் இருந்தாலும் கலந்து சாப்பிடும் போது சில பல்லில் அடிபடும். பல நாக்கில் மிதிபடும். சில பல வாயின் மேற்புறத்தில் ஒட்டிக்கொள்ளும் - கறிவேப்பிலையாய்.

அப்படி, சில நொறுக்குத் தீனிச் சம்பவங்கள்..

ஒரு நடிகனின் முழுமையை நாடகத்தில் தான் காண முடியும். சினிமாவில்கூட திறமையில்லாமல் இருந்துவிட முடியும். ஆனால், நாடகத்தில் ஒரு நிமிடம்கூட நிற்க முடியாது. அதேபோல தவறு செய்துவிட்டாலும் மேடையில் ஒரு வினாடிகூட நிற்க முடியாது. கைத்தட்டல் போலவே கல்லெறி கைங்கர்யமும் கண்ணெதிரிலேயே நிகழும்.

பாகவதர் காலத்திலேயே 'ஆல்ரவுண்டர்' எனப் புகழப்பட்ட பி.யூ.சின்னப்பாவின் மகன் ராஜாபகதூர் ஹீரோவாக நடித்த நாடகங்களில் நான் முக்கிய 'பிட்' (Bit) வேடங்களில் நடித்துக் கொண்டிருந்தேன்.

வரதட்சணை கேட்டு மனைவியை, மாமனார் வீட்டில் விட்டுச்செல்லும் மருமகன் (ராஜாபகதூர்) பேச வேண்டிய வசனம் 'அவ எனக்கு மனைவி மட்டுமில்ல... உங்களுக்கு மகளும்கூட!'

அன்று மேடையில் ராஜாபகதூர் வாய்

# ஜிகினா 7

# சில்மிஷ

தடுமாறி 'அவ எனக்கு மட்டும் மனைவியில்ல, உங்களுக்கும்கூட!' என மாமனாரிடம் ('மட்டும்' இடம் மாறி) கூறிவிட, அவ்வளவுதான். சிறுநகைப்பாகத் துவங்கிய பார்வையாளர்களின் ரியாக்ஷன், கூச்சலாக மாறி திரைச்சீலையால் நாடகத்தின் முகத்தை மறைக்க வேண்டியதாயிருந்தது.

மறுபடியும் அந்த நடிகர் எந்தக் காட்சியில் வந்தாலும் சிரித்தே மேடையின் பின்புறம் விரட்டி விட்டார்கள். One more take கேட்கவே முடியாத நாடக அனுபவம் தான், சினிமாவில் எனக்கு ஒரே டேக்கில் ok செய்யும் திறமையைக் கொடுத்தது.

நான் எப்படி சினிமாவில் நுழைவது என கேட்பதற்காக சின்மையா நகரில் இருந்த பி.யூ.சி.ராஜாபகதூர் வீட்டுக்கு இரவில் போய்ச் சேர்ந்தேன் (நடராஜா சர்வீஸில் கிளம்பியது என்னவோ நடுப்பகலில்). ஒரு குடிசைக்கு முன்புறமிருந்த

ரா.பார்த்திபன்

கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தார் அந்தப் பிரபலத்தின் மகன்.

பளபளப்பு மிகுந்த ஜிகினா வாழ்க்கையெல்லாம் புகழின் பரபரப்பில் இருக்கும் போது மட்டும்தானா? அதிர்ச்சியாகயிருந்தது.

'சினிமாவுல எப்படி நுழையணும்?' - கேட்டேன்.

ஏற்கெனவே போதையிலிருந்த அவருக்குத் தெளிந்துவிட்டது. என்னைப் பார்த்தார். சுற்றும் முற்றும் தேடினார். என் கழுத்தை வேகமாகத் திருப்பினார். ''அதோ, அந்தக் கழனிப் பானையிலே ஒரு ஓட்டை இருக்குதில்லே, அதுக்குள்ள நுழைஞ்சியின்னா

கொலை செய்ததாக கோர்ட்டில் கேஸ் குடிகொண்டது.

செய்தியைப் படித்தபோது 'ய்'-தியிலேயே என் நினைவு பின்னோக்கியது.

'சினிமாவில் நுழைய வேண்டுமா? மேக்கப் டெஸ்ட் எடுக்க ரூபாய் 250 எடுத்து வரவும்'

வழி தெரியாமல் குறுக்கும் நெடுக்குமாய் அல்லாடிக் கொண்டிருந்த எனக்கு, குறுக்கு வழி 250-ல் கிடைக்கிறது என்ற விளம்பரத்தில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் என் கண்களை உறுத்த, நான் அம்மா வழியாக அப்பாவை நச்சரிக்க, அதெல்லாம்

# சினிமா கம்பெனிகள்!

உள்ளே ஒரு உருண்டை சுத்தும். அதுதான் AVM Studio.

உன்னை மாதிரி ஒரு புதுமுகம் கிடைக்கிற வரைக்கும் படம் எடுக்க மாட்டேன்னு ஏவி.எம். சரவணன் கையைக் கட்டிக்கிட்டு நிப்பாரு. நீ அவரை பாரு. அவ்வளவுதான், நீ சூப்பர் ஸ்டார் ஆயிடுவே.''

அவர் கிண்டல் செய்தது. அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

''ஏன்டா...ஏன்டா...ஏன்டா... ஏன்டா... (வேறுவேறு ட்ரெண்டில்) புத்தி கெட்டுப் போய் அலையற?

சினிமாவுக்குன்னே பொறந்த சின்னப் பாவுக்கு பொறந்து, நல்ல தமிழ் உச்சரிப்பு, நியாயமான நடிப்புத் திறமை இத்தனையும் இருக்கிற நானே, வேஷம் கிடைக்காம விரல் சூப்பிக்கிட்டிருக்கேன்... நீ என்னடான்னா...''

அவர் சொன்னதையெல்லாம் காது கேட்டது... மனசு கேக்கலை...விடாமப் போராடி சினிமாவுக்கு வந்து தொடர்ந்து ஓடிக்கொண்டிருப்பதில்தானே வாழ்க்கையின் ஓட்டமே இருக்கிறது...

**ச**மீபத்தில் திரைப்பட இயக்குனர் செல்வாவை, சங்கீதா என்ற துணை நடிகை

மோசடி எனத் தெரிந்தும் என் விருப்பத்துக்காக என்னை அங்கு அனுப்பி வைத்தார்கள்.

புரசைவாக்கத்தில் ஒரு மொட்டை மாடியில் அந்த ஆஃபீஸ் வளர்ந்து கொண்டிருந்தது. மொட்டையில் வளர்வது எப்படியிருக்குமோ அப்படியேயிருந்தது அதன் லட்சணம். இருந்தாலும் சின்ன சந்து கிடைச்சாக்கூட சினிமாவுல சிந்து பாடிடலாமேன்னு பணத்தைக் கட்டிட்டேன்.

'எப்ப சார் ஷூட்டிங் ஆரம்பிப்பீங்க'ன்னு சென்னைக் கொசுவாய் நான் அந்த இயக்குனரைக் கடிக்க, 'சினிமாங்கற வீட்டுக்கு வாசலே நாடகம்தான்' என எனக்கு தெளிப்பானை தெளித்துக் கொண்டிருந்தார்.

நாடகம் என்றால் தினம் ஒரு கிளுகிளுப்பு நாடகம் அந்த அலுவலகத்துக்குள் அரங்கேறியது. அந்த நாடகத்தில் இயக்குனரே, ஹீரோவாக இயங்கினார். ஹீரோயின் - பக்கத்துத் தெருவில் வீட்டு வேலை செய்யும் ஒரு பெண்மணி (சில்க் ஸ்மிதா சாயலில்).

அந்த சி.ஸ் மார்க்கெட்டுக்குப் போவதாகக் கூறிவிட்டு அந்த மொட்டை

மாடிக்கு வந்துவிடும். அது வந்தவுடன் டைரக்டர் என்னை வாசலில் (அதாவது நாடகத்தில்) உட்கார வைத்துவிட்டு உட்புறத்தில் அவர் சினிமா காட்ட ஆரம்பித்தார்.

நடுப்பகல் காட்சி முடிந்து அந்த சி.ஸ். வெளியேற, 'தம்பி, நீ ஒரு டீ குடிச்சிட்டு எனக்கு ஒரு ராகிமால்ட் வாங்கிக்கிட்டு வாயேன்' என்று என்னை டைரக்ட் செய்வார்.

நான் படியிறங்கும்போது, என் தன்மானம் படிப்படியாய் கீழிறங்கும். என் ரோஷம் விற்று ராகிமால்ட் வாங்கி வருவேன்.

தேங்ஸுக்குப் பதிலாக 'நீ சினிமாவுல பெரிய ஹீரோவா வருவே, ஏன்னா உன் கண்ணு நிறைய பேசுது' என்பார். மீண்டும் மேட்னி காட்சி. 'மிஷனுக்குப் போய் மொளகா, தனியா அரைச்சுட்டு வர்றேன்'னு வந்த அந்த சி.ஸ்ஸு இடைவேளை போட்டுவிட்டு ஓடிவிடும். கிட்டத்தட்ட எனக்கு ஆறு மாதம் (அந்த சி.ஸ்ஸுக்கு எத்தனையோ) கழித்துத்தான் புரிந்தது - அந்த டைரக்டர் அப்பாவாகி, தாத்தாவானாலும் அங்கிருந்து நான் ஹீரோவாக முடியாது என்று.

இப்படிப்பட்ட சில்மிஷ சினிமா கம்பெனிகள் இன்னும் நிறைய உள்ளன. தேடிப் பார்த்தால் என்னைப்போல் எவனோ ஒருவன் ராகிமால்ட் வாங்கிக் கொடுத்து சினிமாவில் நுழைய முட்டி மோதிக் கொண்டிருக்கலாம்.

தயாரிப்பாளர்கள் + இயக்குனர்கள் சங்கம் ஒரு பறக்கும் படை அமைத்து, இது போன்ற போலிகளை அகற்றினால் செல்வா, சங்கீதாக்களைப் படுத்தும் கொலைகளையும், சினிமா படுகொலைகளையும் தவிர்க்கலாம்.

**தொ**ப்பி ராஜேந்திரன் என்ற ஒரு மேக்கப்மேன் என் முகவெட்டைப் பார்த்து, 'மேக்கப் போட்டு போட்டோ எடுத்து டைரக்டர்களிடம் காட்டினால் சான்ஸ் கிடைக்கும்' என்றார். அதற்குக் குறைந்தது ரூ.200 தேவை என்றார். விக் வைத்து எடுத்தால் இன்னும் எடுப்பாக இருக்கும் என்றார்.

அம்மாவிடம் சொன்னேன். தன் மூக்கை மூளியாக்கி, மார்வாடியிடம் பணம் வாங்கி என்னிடம் கொடுத்தார்.

ஃபோட்டோக்கள் எடுத்தாகிவிட்டது. ஆனால், ஃபோட்டோ + பிரிண்ட் போட்டது எல்லாமும் சேர்த்து ரூ.150 கொடுத்தால்தான் அந்தப் புகைப்படங்கள் என் கைக்குக் கிடைக்கும். பிறகு டைரக்டர்கள் கைக்குக் கிடைக்கும். அப்போதுதான் எனக்கு சான்ஸ் அடிக்கும்.

அசோக் பில்லருக்கு அருகில்தான் அந்த ஸ்டுடியோ. ஷோகேஸின் கருவறையில் பத்து மாதங்களாவது அந்த ஃபோட்டோக்கள் இருந்தன. பிரசவமாகவே இல்லை.

நான் மட்டும் போய்ப் பார்த்துவிட்டு, பார்த்துவிட்டு, பார்த்துவிட்டு...

**(மின்னும்)**

**அசோக் பில்லருக்கு அருகில்தான் அந்த ஸ்டுடியோ. ஷோகேஸின் கருவறையில் பத்து மாதங்களாவது அந்த ஃபோட்டோக்கள் இருந்தன. பிரசவமாகவே இல்லை!**

# வட்டமேஜை

என்னென்னவோ விஷயங்களுக்கு கருத்துக் கணிப்பு நடத்தி வில்லங்கங்களில் மாட்டிக் கொள்ளும் பத்திரிகைகளுக்கிடையே, வாசகர்களை மதித்து, அவர்களது தேவையை அறிந்து, அதற்குப் பரிகம் அளித்து, தேச நலனை என்றும் விட்டுக்கொடுக்காமல், தரமான, பயனுள்ள பொழுதுபோக்கினை வழங்க முனைந்திருக்கும் கல்கியின் சேவை வணங்குதற்குரியது.

**- லெ.நா.சிவகுமார், சென்னை**

'பாரதிய ஜனதா கட்சியின் தீவிர ஹிந்து அடிப்படை வாதத்தைக் கைவிட வேண்டும்' என தலையங்கத்தில் குறிப்பிட்டிருப்பது பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய ஒன்று.

**- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்**

**1954**ல் கல்கி அவர்கள் கூறியதைப் போல் அன்பினால் உருவாவதே காதல் - கலப்பு மணம். கட்டாயப்படுத்திக் காதலை வரவழைக்க முடியாது.

**- ஜெகா, கும்பகோணம்**

நகைச்சுவையை மட்டுமே எதிர்பார்த்ததற்கு மாறாக, நல்ல கருத்துக்களையும் தன் பதிலில் சொல்லி அசத்துகிறார் கிரேஸி.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

வி.கோபாலனின் உயரும் அந்நியச் செலாவணி கட்டுரை, கருத்தாழம் மிக்கதாய் மிளிர்ந்தது.

**- எஸ்.சீனிவாசன், மதுரை**

'குறட்டை விடும் காவல் துறை...?' அட்டைப்படக் கட்டுரை மதுரை சம்பவத்தை மனத்தில் வைத்து முன்பே ஆரூடம் சொல்லியதுபோல் இருந்தது.

**- சத்தியமூர்த்தி, கரூர்**

## அன்றே சொன்ன ஆரூடம்!





# நோபல் பரிசு பெற்றவருடன் நேர்முகம்...

**'ப்**ரியான்' என்னும் ஒரு புரதத்தைக் கண்டுபிடித்து, அதற்காக நோபல் பரிசு பெற்றவர் டாக்டர் ஸ்டான்லி ப்ருஸினர். டி.எஸ்.ஸ்ரீனிவாசன் அறக்கொடை பேருரைக்காக சென்னைக்கு வந்திருந்த அவரைச் சந்தித்தோம். நரம்பியல் தொடர்பான நமது சந்தேகங்களுக்கு அவர் தெளிவாக பதிலளித்தார்.

**உங்கள் கண்டுபிடிப்பான 'ப்ரியான்' புரதத்தைப் பற்றிச் சொல்ல முடியுமா?**

''ஸ்க்ரேபி என்பது ஆடு மாடுகளைத் தாக்கும் நோய். இது குறித்து ஏற்கெனவே சில தகவல்கள் இங்கிலாந்தில் வெளியாகி இருந்தன. இந்த நோயினால் பாதிக்கப்பட்ட செம்மறி ஆடுகளைப் பற்றி முன்பே சில இதழ்களில் விவரிக்கப்பட்டிருந்தது. இந்த நோய் தாக்கிய விலங்குகள் தங்கள் உடலை வேலிகளில் உரசின. தள்ளாடியபடியும் கீழே உதைத்தபடியும் சிறு பிள்ளைத்தனமான நடத்தையை வெளிக்காட்டின. பிறகு படுத்த படுக்கையாகி, சுற்றுப்புறம் குறித்த உணர்வில்லாத இறுதி நிலையை எட்டின.

ஸ்க்ரேபி குறித்து ஆராய 1974ல் ஒரு பரிசோதனைச் சாலையை நிறுவினேன். 1982ல் ஸ்க்ரேபியின் காரணியைத் தனிமைப்படுத்த முடிந்தது. நான் கண்டுபிடித்த நோயணுப் பொருளுக்கு 'ப்ரியான்' எனப் பெயரிட்டேன். ப்ரியான்கள் எனப்படுபவை தொற்றக்கூடிய புரதங்கள்.''

**முதலில் வெளியானபோது, ப்ரியான் கோட்பாடு விமர்சனத்தைச் சந்தித்ததே... எதனால் அந்த பலத்த விமர்சனம்?**

''ப்ரியான்கள் மனிதர்களிடையேயும் விலங்குகளிடமும் ஒன்றுக்கொன்று பரவக் கூடியவை என்று கூறினேன். மரபணு தொடர்பான ஒரு நோய், தொற்றுநோயாக எப்படி இருக்க முடியும்? தவிர நியூக்ளிக் அமிலம் இல்லாத ப்ரியான் துகள் எப்படி தன்னைப் வகுத்துக்கொள்ள முடியும்? இவைதான் எழுப்பப்பட்ட கேள்விகளில் அடிப்படையானவை.

ஆல்ஃபா திருகுசுழல் வடிவம்கொண்ட ப்ரியான் புரதம், மடிந்த வடிவம்கொண்ட ப்ரியான் புரதமாக மாறும்போது ஸ்க்ரேபி நோய் தூண்டப்படு

# மாட்டிலிருந்து மனிதனுக்கு...

கிறது என்று கண்டுபிடிக்கப்பட்டது. மிகவும் எதிர்பாராத விதத்தில், இவை மிக அதிகமாக மூளைத் திசுக்களில் இருப்பது தெரியவந்தது. இதுதான் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது.''

**ப்ரீயான்கள் மனிதர்களிடையே எது போன்ற பாதிப்புகளை உண்டாக்கலாம்?**

''அல்ஷைமர் நோய் எனப்படுவது மூளையின் நரம்புச் செல்கள் அழிபடும் நோய். மூளையில் பீட்டா அமைலாய்ட் புரதப் படிமங்கள் தங்குவதால் இது ஏற்படக்கூடும் என்பதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. ப்ரீயான் போலவே மேற்படி புரதமும் தன் வடிவத்தை மாற்றிக் கொள்ளும்போதுதான் இத்தகைய பாதிப்பு ஏற்படுகிறதா என்பது தொடர்பான ஆராய்ச்சிகள் வேகம் அடைந்து வருகின்றன. தீர்க்கமுடியாத அல்ஷைமர் நோய்க்கு இதன்மூலம் தீர்வு பிறக்க வாய்ப்பு உள்ளது.''

**- ஜி.எஸ்.எஸ்.**





# கல்கி



2007 மே 27
சர்வஜித் வைகாசி 13
மலர் : 65
இதழ் : 43

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## குண்டர்கள் ராஜ்ஜியம்!

கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை. மு.க.அழகிரியின் ஆதரவாளர்கள்தான் மதுரை தினகரன் அலுவலகத்தில் தாக்குதல் நடத்தி, தீ வைத்து, மூன்று பேர் மரணத்துக்குக் காரணமாகவும் இருந்திருக்கிறார்கள். இவர்களில் ஒருவருமே தங்கள் தலைவரின் ஆசியும் ஆமோதிப்பும் இன்றி இவ்வளவு பயங்கரமாகச் செயல்பட்டிருக்க முடியாது.

காவல்துறையினர் நின்று வேடிக்கை பார்க்க, பகிரங்கமாக இந்தக் கொடுமை அரங்கேறியிருக்கிறது என்கிறபோது, கட்சிக்காரர்களின் ரௌடித்தனத்துக்கு ஆட்சி அமைப்பும் துணை நின்றதாகவே கொள்ள வேண்டியிருக்கிறது. பத்திரிகைச் செய்திகள் அல்லது விமர்சனங்களை எதிர்க்க உரிய முறைகள் இருக்கின்றன. முறையிட அமைப்புகள் உள்ளன. ஆனால் அவற்றை நாடும் பொறுமையும் பண்பாடும் மாறி, வன்முறை வழிகள் கையாளப்படுவது அபாயகரமான போக்கு.

சம்பவத்தைக் கண்டனம் செய்த முதல்வர், தமது ஆதரவாளர்களைக் கட்டுப்படுத்தத் தவறிய மகனைக் கண்டிக்கவில்லை; சி.பி.ஐ. விசாரணைக்கு மட்டும் வழி வகுத்திருக்கிறார்.

இறந்தவர்களின் நெஞ்சு வேகும் முன் சென்னையில் முதல்வருக்குப் பொன்விழாக் கொண்டாட்டங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன! அதிலே கூட்டணிக் கட்சித் தலைவர்களும், மத்திய அமைச்சர்களும் பிரதமரும் கூடப் பங்கேற்று, முந்தைய தினம் நடந்த கோரக் கிருத்யத்தைக் குறித்து எதுவும் குறிப்பிடாமல் வாழ்த்திச் சென்றிருக்கின்றனர்! மு.க.அழகிரியோ, காவல்துறை



அரவணைத்துக் காக்க, பொன்விழாவில் பங்கேற்க சென்னை வந்து போயிருக்கிறார்!




கட்சி மட்டத்திலோ, தி.மு.க. தலைமை, மு.க. அழகிரியைத் தட்டிக் கேட்பதற்குப் பதிலாக, தயாநிதி மாறனுக்குக் கல்தா கொடுத்திருக்கிறது! அவர் கட்சி விரோத நடவடிக்கையில் ஈடுபட்டதாக ஒரு நொண்டிக் காரணம் அதற்குச் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, என்ன குற்றம் இழைத்தார் என்பது விண்டு சொல்லப்படவில்லை.

சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவிட்ட பிறகு, சம்பவம் நடந்து ஒரு வாரம் கழித்து 'அட்டாக் பாண்டியன்' கைது செய்யப்பட்டிருப்பது பல சந்தேகங்களுக்கு இடங்கொடுத்திருக்கிறது. இத்தனை நாள் என்ன செய்து கொண்டிருந்தது போலீஸ் என்பது மில்லியன் டாலர் கேள்வி!

இவ்வளவு கூத்துக்கிடையில் ''தினகரனுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை; சன் டீ.வி.க்கும் எனக்கும் சம்பந்தமில்லை'' என்று தயாநிதி மாறன் சன் டீ.வி.யில் பேட்டி அளிப்பது சிறுபிள்ளைத்தனமாக இருக்கிறது.

தினகரன் நடத்திய கருத்துக் கணிப்புகள், தயாநிதி மாறன், ஸ்டாலின் ஆகியோரின் இமேஜை வளர்ப்பதற்காக மட்டுமல்ல, அழகிரியின் செல்வாக்கைக் குறைத்துக் காட்டவும் திட்டமிட்டு வடிவமைக்கப்பட்டவை என்பது கொஞ்ச - நஞ்சம் சிந்திக்கக் கூடிய யாருக்குமே புரியும்.

பத்திரிகைகள் கருத்துக் கணிப்புகளை நடத்துவதைத் தடைசெய்ய முடியாது. அவ்வுரிமை ஏற்கெனவே உச்சநீதிமன்றத்தால் உறுதிசெய்யப்பட்டிருக்கிறது. ஆனால், எது குறித்து, எதற்காகக் கருத்துக் கணிப்பு நடத்துவது என்கிற பொறுப்புணர்ச்சி பத்திரிகைகளுக்குத்தான் இருக்க வேண்டும். அதைச் சட்டம்போட்டு வரவழைக்க முடியாது. பத்திரிகை தர்மத்தைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, பத்திரிகைச் சுதந்திரத்தை மட்டும் பிரயோகித்தால், விபரீதங்கள்தான் விளையும். பரபரப்புக்காக எதையும் செய்யலாம் என்ற வியாபார நோக்கும் இதற்குக் காரணம்.

மொத்தத்தில், வாரிசு அரசியல் தொடர்பான குடும்பச் சண்டையில், சம்பந்தமேயில்லாத மூன்று உயிர்கள் காவு கொடுக்கப்பட்டுவிட்டன.

சி.பி.ஐ. விசாரணையின் முடிவு, கிடைக்கும் சாட்சிகளின் அடிப்படையில்தான் அமையுமே தவிர, குற்றத்தைத் தூண்டியவர்களையும், அதனை ஆதரித்தவர்களையும் குற்றவாளிக்குப் பாதுகாப்பு அளித்தவர்களையும் குண்டர்படை வைத்திருப்பவர்களை வெளிப்படுத்தாது. இவற்றை ஒரு நீதிபதியின் தலைமையிலான நீதி விசாரணை மட்டுமே அம்பலப்படுத்த முடியும். தனி நீதிபதி நியமிக்கப்பட்டால், பொது மக்கள் அவரிடம் நேரில் சாட்சி சொல்ல முன்வருவார்கள்.

ஒரு பொன் விழாக் காலம் சட்டமன்ற உறுப்பினராக முதல்வர் விளங்கியதற்கு ஏதேனும் அர்த்தம் இருக்க வேண்டுமானால், அத்தகைய விசாரணையை நடத்த தகுதியான ஒரு நீதிபதியை நியமிக்குமாறு அவர் உடனே மத்திய அரசைக் கேட்டுக் கொள்ள வேண்டும். ●

லட்ச ரூபாய் பரிசுப் போட்டியில் 3வது போட்டியாக 'உங்கள் பார்வையில் சிவாஜி'யை அறிவித்திருந்தோம். 'சிவாஜி' படத்தில் வரும் 'சஹானா' பாடலைக் கேட்டு, மூன்று வரி ஹைக்கூவாக விமர்சனம் எழுதக் கேட்டிருந்தோம். வந்து குவிந்த ஏராள கவிதைகளில் சிறந்தவையாகத் தேர்வாகி, தலா ஒரு வாஷிங்மெஷின் பரிசாகப் பெறும் மூன்று ஹைக்கூக்கள்...

சஹானா சாரல் கேட்டு
தலை குனிந்தது
மரக்கிளை குயில்!

- ராம் ஆதிநாராயணன், தஞ்சை

தமிழகத்தில் கோடை மழை
அட... சரிதான் வானிலை அறிக்கை
சஹானாவின் சாரல் மழை!

- என்.உஷாதேவி, மதுரை

# சஹானா சாரல்



## வாஷிங் மெஷின் பெறும் வாசகர்கள் யார் யார்?

கைப்பேசியின் காதுகளும் நாணுகிறதே
மைபூசிய வார்த்தைகளின் காதலிலே
சஹானா...

- வசந்தபாரதி, கரூர்

ஆறுதல் பரிசு பெறும் பத்து ஹைக்கூக்கள்...

காதில் உல்லாசம்
தேனின் விலாசம்
சஹானா...

- எஸ்.அஸ்மா, முசிறி

காற்று செதுக்கிய சிற்பம்
கண்ணில் மிதக்கிற தெப்பம்
சஹானா...

- அவ்வை கே.சஞ்சீவிபாரதி, ஈரோடு

சர்க்கரை இல்லாமலே
இனித்தது தேனீர்
காதிலே சஹானா
- ஏ.சாதிக்குல், நாகர்கோவில்

மௌனத்தின் மழைச் சாரல்
இதயத்தின் இன்ப ஊழல்
மெல்லிசை மேகத்தின் பனிப்பூ சிதறல்
- க.கார்த்திகேயன், பெங்களூர்



# வீசுதோ!






இசைப் புயலில்
ஆடுகிறது
கறுப்பு காந்தம்
- த.இராஜவேல், தேனி

சரித்திர சிவாஜிக்கு
ஜிஜாபாய் அடித்தளம்
ஷங்கர் சிவாஜிக்கு
சஹானா சரித்திரம்
- பி.ஜி.பி.இசக்கி, நெல்லை

உண்மைக் காதல்தனில்
பொய்கூட அழகுதான்! ஆம்...
சஹாராவில் பூக்கள்
- மதுரை முருகேசன், திருச்சி

சகாராவில்
பூத்த சாமந்திப் பூ
சஹானா...
- சத்தியமூர்த்தி, துபாய்

வாசச் சொல்லடுக்கு
வசந்த குயில் மெட்டு
வாலிபத் தாலாட்டு
- அ.யாழினி பர்வதம், சென்னை

இளமை பொங்கும்
இதயம் மலரும் இசையில் உருகும்
சஹானா...
- எல்.மாறன், மேல்பட்டி



# நூத்தி எட்டாவது குடம்!

அந்த ஊரிலுள்ள தீர்த்தக்கரை பிள்ளையாருக்கு யார் நூற்றெட்டுக் குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்கிறாரோ, அவர் ஒரு மகாராஜாவாக விளங்குவார் என்று ஜோசியர்கள் சொல்லி வந்தார்கள்.

ஆனால், அந்த ஜோசியத்தை யாரும் நம்பவில்லை. கஷ்டப்பட்டு நூற்றெட்டுக் குடம் தண்ணீரை எடுத்து அபிஷேகம் செய்துவிட்டுப் பிறகு ஏமாந்து போக அவர்கள் விரும்பவில்லை.

எனினும், ஒருவர் மாத்திரம் நாம் மகாராஜாவாக இருக்க வேண்டும் என்ற ஆசையால், தேக சிரமத்தைப் பொருட்படுத்தாமல் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்ய முன் வந்தார்.

ஒன்று, பத்து, இருபது, ஐம்பது, நூறு குடம் தண்ணீர் அபிஷேகம் செய்தாகி விட்டது.

நூற்றேழு குடமும்கூட அபிஷேகம் செய்தாகிவிட்டது.

கடைசியில் ஒரே ஒரு குடம்தான் பாக்கி. ஆனால், அபிஷேகம் செய்தவர் அரசனாவதற்கான அறிகுறி எதுவுமே தென்படவில்லை.

உடனே அவருக்கு விக்னேசுவரரின் மீது பிரமாதமான கோபம் ஏற்பட்டது. 'கஷ்டப்பட்டு அபிஷேகம் செய்தது வீணாகி விட்டதே' என்ற ஏமாற்றமும் உண்டாயிற்று.

அதனால் அவர் ஆக்திரத்துடன் நூற்றெட்டாவது குடத்தை பிள்ளையாரின் தலையில் போட்டு உடைத்தார்.

அவ்வளவுதான்! அபிஷேகம் செய்தவர் ஏமாறவில்லை! பிள்ளையார் உடனே பிரத்யட்சமானார்!

''நீ மகாராஜாவாகக் கடவாய்'' என்று வரம் தந்து அருளினார்.

அபிஷேகம் செய்தவர், நம்ப முடியாத அந்தக் காட்சியைக் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார்.

''ஆனால், நூற்றெட்டாவது குடத்தை நீ என் தலையில் போட்டு உடைத்ததால் என் தலை நொறுங்கவில்லை. உன் முடியையே நீ நொறுக்கிக் கொண்டாய். ஒரு காலத்தில் நீ மாத்திரமல்ல, இந்த உலகத்திலேயே மகாராஜாவாக உள்ள எல்லோருமே முடியிழப்பார்கள்'' என்று தீர்த்தக்கரை பிள்ளையார் மேலும் திருவாய் மலர்ந்து சாபம் கொடுத்து விட்டு மறைந்தார்!

- கல்கி 8.1.1950 இதழிலிருந்து...

**அமரர் கல்கி**



# உங்கள் ஆதிசேஷன் யார்?

**ம**ல்ட்டி பர்ப்பஸ் என்ற வார்த்தைக்கு 'பல்பயன்' அல்லது 'பல்திறன்' என்று தமிழில் சொல்லலாம். மகாவிஷ்ணுவுக்கு அனந்தாழ்வான் என்று சொல்லப்படும் ஆதிசேஷன் ஒரு மல்ட்டி பர்ப்பஸ் தொண்டர். ராமாயணத்தில் லக்ஷ்மணன் 'ராமனுக்கு நான் எல்லாம் செய்வேன்' என்று சொன்னது மட்டுமன்றி, புது மனைவியைப் பிரிந்து, கூடவே காட்டுக்கு வந்து, காவல் காத்து, சீதையிடம் திட்டு வாங்கி, காடெல்லாம் அலைந்து தேடி, சண்டை போட்டு, அசுரனின் அம்பில் ஏறக்குறைய இறந்து... லக்ஷ்மணனின் சேவையை நாம் எளிதில் மறக்க முடியாது.

லக்ஷ்மணனை ஆதிசேஷனின் அம்சம் என்றுகூடச் சொல்வார்கள். இந்த சிநேகிதப் பாம்பு திருமாலுக்கு என்னவெல்லாம் செய்கிறது? அவர் நடந்து செல்லும்போது குடையாகிறது; உட்காரும்போது சிம்மாசனமாகிறது; சும்மா நின்றால் கால் செருப்பாகிறது; அவர் பாற்கடலில் துயில்கொள்ளும்போது சொகுசாக மிதக்கும் தெப்பமாகிறது. இரவில் அதன் கண்கள் ரத்தினம்போல் ஒளிர்ந்து வெளிச்சம் காட்டுகின்றன. அதனைப் பட்டாடை போல போர்த்திக்கொள்ளவும் அனுமதிக்கிறது. தலையணையாகவும் கட்டிக்கொள்ளலாம்.

**சுஜாதா**

# உயிர் காக்க உதவுங்கள்



எனது மூன்று வயது மகன் **சித்தார்த்** பிறந்ததிலிருந்தே **தாளசேமியா மேஜர்** (Thalasemiya Majar) என்கிற உபாதையினால் அவதிப்படுகிறான். அதற்காக குழந்தைப் பருவத்திலிருந்தே அவனுக்கு தொடர்ச்சியாக ரத்தம் செலுத்தப்பட்டு வருகிறது.

அவனுக்கு சிகிச்சை செய்து வரும், அப்போலோ ஸ்பெஷாலிடி ஹாஸ்பிட்டலில் உள்ள பிரபல மருத்துவர் டாக்டர் ரேவதி ராஜ் DCH (Pediatrics) MRC Path (Haematology) அவர்கள் **Bone Marrow Stem Cell Transplation** மூலமாகத்தான் வியாதியை குணப்படுத்த முடியுமென்று தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு சுமார் 8,00,000/- ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சாதாரண கார் டிரைவராக தனியாரிடம் பணிபுரியும் எனக்கு, இவ்வளவு பெரிய தொகையை ஏற்பாடு செய்ய முடிய வில்லை ஆகவே உதவும் உள்ளம் கொண்ட அன்பர்கள் பணமாக உதவி செய்து என் மகனைப் பிழைக்க வைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

தாங்கள் அனுப்பவிரும்பும் காசோலையை **Apollo Speciality Hospital Siddharth - 115477** என்று எழுதி அனுப்பும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பன் : **எம். முருகேசன்,** (செல் : 99400 46974)

4/241, எம்.ஜி.ஆர். சாலை, பாலவாக்கம், சென்னை - 600 041.

---

*'சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்*
*நின்றால் மரவடியாம் நீள்கடலுள் -- என்றும்*
*புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்*
*அணையாம் திருமாற்(கு) அரவு.'*

(புணை-தெப்பம், புல்கும் - அணைத்துக்கொள்ளும்)

பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதியில் உள்ளது இந்த வெண்பா. இதைத் தொடர்ந்து பிற்காலத்தில் 'கணிகண்ணன் போகின்றான்' என்று துவங்கும் இரண்டு தனிப் பாடல்கள். ஆழ்வார் ஆணைப்படி பெருமாள் படுத்திருந்தவர் எழுந்து வந்துவிட்டார் என்றெல்லாம் சுவாரஸ்யமான கதைகள் உள்ளன.



**உலகின் பெரிய மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இம்மாதிரி ஓசைப்படாமல் எல்லாக் கைங்கர்யங்களும் செய்பவர்கள் இருப்பார்கள்.**

உலகின் பெரிய மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இம்மாதிரி ஓசைப்படாமல் எல்லாக் கைங்கர்யங்களும் செய்பவர்கள் இருப்பார்கள். அவர்களைப் பெரும்பாலும் நாம் மறந்து விடுகிறோம். பொதுவாக ஆதிசேஷன் என்று அவர்களை அழைக்கலாமா?

(படிக்கலாம்)

# ஸ்பைடர்மேன்-3



**கோ**டை விடுமுறை சமயத்துல குழந்தைகளைக் குதூகலப்படுத்த சரியா வந்து இறங்கிட்டாரு ஸ்பைடர்மேன் -3. படத்துல வர்ற பல கேரக்டர்கள் முந்தைய படங்களோட தொடர்ச்சின்னாலும், தனியா பார்த்தாலும் கதை புரியுது. ஆரம்பத்துல கிளம்புற பிரமிப்பும் விறுவிறுப்பும் கடைசி வரை தொடருது. குழந்தைகளுக்கு மட்டுமில்லாம பெரியவங்களுக்கும் பிடிச்ச ஹீரோ ஆயிடறார் ஸ்பைடர்மேன்.

காமிக் புக் கதைன்னாலும், அதை வச்சு புத்திசாலித்தனமா ஸ்கிரிப்ட் பண்ணிட்டாங்க. இந்தப் படத்துல ஸ்பைடர்மேனுடன் மோதுற வில்லன்களில் ஒருத்தன் சிலிக்கான்மேன். ஒரு ரேடியேஷன் பரிசோதனைக் கூடத்துல எதிர்பாராத விதமா சிக்கிக்கிற வில்லன் சிலிக்கான், அப்பப்போ மனிதனா மாறி தூள் கிளப்பறான். மெகா சைஸ் சிலிக்கான் மனிதனைத் திரையில் பார்க்கறப்போ, திகில் ப்ளஸ் த்ரில். சண்டைக் காட்சிகள்ல ஹாலிவுட் படங்களுக்கே உரிய பிரம்மாண்டம் மிரட்டுது.

ஸ்பைடர்மேன் ஒரு கல்லூரி மாணவன். அவருக்குப் பிரபல பத்திரிகையில் பார்ட் டைம் போட்டோகிராஃபர் வேலை. தங்களோடு பணிபுரியும் போட்டோகிராஃபர் பீட்டர்தான் ஸ்பைடர்மேன்னு மத்தவங்களுக்குத் தெரியாது. ஸ்பைடர்மேன் பத்தி நெகட்டிவா ஏதாவது எழுதிப் பரபரப்பு பண்றாங்க. ஆனா, ஸ்பைடர்மேன் ஒரு விழா மேடையில தோன்றி தன் சக மாணவிகிட்ட சலசலப்பை ஏற்படுத்தறார்.

வேற்றுக் கிரக கறுப்புச் சிலந்தியோட கை வரிசையால, வழக்கமா சாந்த குணம்கொண்ட ஸ்பைடர்மேனுக்கு அவ்வப்போது பழிவாங்கும் வெறியும் ஏற்படுது. ஆனா, ரொம்பக் கஷ்டப்பட்டு கறுப்புச் சிலந்தி உடையைக் கழற்றி எறிகிறார். அது எதிர்பாராதவிதமா இன்னொரு வில்லனோட கைக்குப் போகுது. கடத்தப்படுற காதலியை, சிலிக்கான் மனிதன் + கறுப்புச் சிலந்தி மனித வில்லன்கள்கிட்டருந்து ஸ்பைடர்மேன் எப்படி மீட்கறாருங்கறதுதான் கிளைமாக்ஸ்!

- லஜ்ஜாவதி



# ஒரு விட்டில்

"தலைவரை கிரிக்கெட் போட்டித் துவக்க விழாவுக்கு அழைச்சுட்டுப் போனப்ப அவர் புத்தியைக் காட்டிட்டார்!"

"எப்படி?"

"இந்த கிரவுண்டை வளைச்சுப் போட்டா தேவலைன்னு பேச ஆரம்பிச்சுட்டாரே!"

- ஆர்.சி.முத்துக்கண்ணு





"எதுக்காக சார் இந்தப் படத்தில் என் சொந்தக் குரலிலேயே டப்பிங் பேசச் சொல்றீங்க?"

"இது திகில் படமாச்சே!"

-பி.யோகநாதன்

"என்னது, புலவரிடம் நம் மன்னர் புறமுதுகிட்டு ஓடினாரா?"

"ஆமாம்! புலவரின் பாடல் அப்படி!"

- சுஹைல் ரஹ்மான்





"என்னங்க... நம்ம வீட்டுல பேய் நடமாட்டம் இருக்குமோன்னு சந்தேகமா இருக்கு!"

"சான்ஸே இல்லை கமலா... ஒரு வீட்ல ரெண்டு பேய் இருக்கவே முடியாதாம்!"

- குட்டி பிரசன்னா

# ரெண்டு பேய்!



"என்ன சார் இது... அரை மணி நேரமா ஃபோனைக் காதுல வெச்சுக்கிட்டு ஒண்ணுமே பேசாம இருக்கீங்க?"

"சும்மா இருங்க சார்; நான் என் மனைவியோட பேசிக்கிட்டு இருக்கேன்."

- ஆ.விஜயலக்ஷ்மி

"மன்னர் மேலே புலவர் ஏன் கோபமா இருக்கார்?"

"பொன் வைக்கிற இடத்துல பூ வைக்கலாம்னு யாரோ சொன்னதும் பொற்கிழிக்குப் பதில் பூக்கிழி கொடுத்துட்டாராம் மன்னர்!"

-ஆர்.ராஜலட்சுமி





# முதல்வன் 19

மெலிண்டாவைத் திருமணம் செய்து கொண்டார் பில் கேட்ஸ்.

மெலிண்டா - பில் கேட்ஸ் தம்பதியருக்கு மூன்று குழந்தைகள் - ஜெனிஃபர் காதரின், ரோரி ஜான், போபே அடெல். வாஷிங்டன் அருகே, பிரம்மாண்டமான, நவீன தொழில்நுட்பத்தின் உச்சமாகக் கருதப்படும் ஒரு மாளிகையில் வசிக்கிறது இந்தக் குடும்பம்.

மெலிண்டா தொடங்கிய ஓர் அறக்கட்டளை, உலகின் மிகப்பெரிய சமூக சேவை அமைப்பாகத் திகழ்கிறது.

இப்போது தம்பதியர் இருவருமாகச் சேர்ந்து ஏழைகள், நலிந்தோருக்கான உதவிகளை வாரி வழங்குகிறார்கள்.

பில் கேட்ஸ் இன்னும் ரிடையர்மெண்ட் வயதைக்கூட எட்டவில்லை. வருகிற அக்டோபர் கடைசியில்தான் ஐம்பத்திரண்டைத் தொடப்போகிறார். அதற்குள் அவர் மைக்ரோசாஃப்டிலிருந்து விலக வேண்டிய அவசியம் என்ன?

காரணம் எதுவானாலும், பில் கேட்ஸ் இனிமேல் சமூகப் பணிகளில்தான் அதிக கவனம் செலுத்தப்போகிறார்.

ஒரு காலத்தில், பில் கேட்ஸைப்

# பட்டியல்

பள்ளிப் பருவத்தில் கணினி மீது காதல் கொண்ட பில் கேட்ஸ், ஒரு கட்டத்தில் அது மட்டும்தான் தன்னுடைய வாழ்க்கை என்று முடிவு கட்டிவிட்டார். கம்ப்யூட்டர்களையே காந்தர்வத் திருமணம் செய்து கொண்டு விட்டார்.

அதன்பிறகு, கணினி தொழில்நுட்பத்தில் ஏற்பட்ட முன்னேற்றங்களின் விளைவாக, அந்தக் காதல் பல மடங்கு அதிகரித்தது. எல்லாமே கணினிதான் என்று தனக்கான உலகத்தை அமைத்துக் கொண்டு விட்டார் பில் கேட்ஸ்.

முப்பத்தைந்து வயது தாண்டியும் அவர் திருமணம் செய்துகொள்ளாதபோது யாரும் ஆச்சர்யப்படவில்லை. ஆனால், நாற்பது வயதைத் தொடுவதற்குச் சற்று முன்னதாக அவரும் திருமண வலையில் விழுந்து எல்லாருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தார். 1994-ஆம் வருட புத்தாண்டு தினத்தன்று, தம்முடைய மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தில் பணிபுரியும்

பார்த்து ஏராளமான இளைஞர்கள் சொந்தமாகத் தொழில் செய்யவும், கடுமையாக உழைக்கவும் கற்றுக்கொண்டார்கள். இப்போது அதே பில் கேட்ஸைப் பார்த்து உழைக்கிற, சம்பாதிக்கிற இளைய தலைமுறையினர் தங்களுடைய சமூகப் பொறுப்பைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

தொண்ணூறுகளின் மத்தியில், மைக்ரோசாஃப்டின் விண்டோஸ் ஆபரேட்டிங் சிஸ்டம்தான் தீவிரமாக இயங்கிக் கொண்டிருந்தது.

இந்த அதீத ஆதிக்கத்தைப் பயன்படுத்தி மைக்ரோசாஃப்ட் சில விஷமத்தனமான பிஸினஸ் உத்திகளைச் செயல்படுத்தத் தொடங்கியது. இதன்மூலம் விண்டோஸ் வாங்குகிறவர்கள், மைக்ரோசாஃப்டின் தயாரிப்புகளையே அதிகம் பயன்படுத்த வேண்டிய கட்டாயம் உண்டானது. இதனால் மைக்ரோசாஃப்ட் அல்லாத மற்ற தயாரிப்பாளர்கள் பாதிக்கப்பட, பிரச்னையாகிவிட்டது.

மற்ற மென்பொருள் நிறுவனங்களை மைக்ரோசாஃப்ட் நசுக்குகிறது என்று அதன் மீது வழக்குத் தொடரப்பட்டது.

இந்த வழக்குகளின் முடிவில், சட்டரீதியாக மைக்ரோசாஃப்டுக்குப் பெரிய பாதிப்பு எதுவும் இல்லை. ஆனால் இவற்றின் மூலம் பில் கேட்ஸுக்கு ஏராளமான விரோதிகள் உண்டாகிவிட்டனர்.

அதனால்தானோ என்னவோ, கடந்த சில வருடங்களாகவே பில் கேட்ஸ் இந்தச் சர்ச்சைகளில் தலையிடாமல் முடிந்தவரை ஒதுங்கியே இருந்துவிட்டார். சமீபத்தில் வெளியான விண்டோஸ் விஸ்டா (Vista) வடிவத்துக்கான விளம்பரங்கள், ஊடகச் செய்திகளில்கூட, பில் கேட்ஸின் ஆளுமை கவனமாகத் தவிர்க்கப்பட்டிருந்தது.

எது எப்படியிருந்தாலும் மைக்ரோசாஃப்டுக்கு எந்த விபரீதமும் நடந்துவிடாதபடி கவனமாகத் திட்டமிட்டுதான் ஓய்வு பெற்றிருக்கிறார் கேட்ஸ்.

ஸ்டீவ் பால்மர், ரே ஓஸி, க்ரெய்க் முண்டி ஆகியோர் பில் கேட்ஸின் இடத்தை நிரப்பிக் கொண்டிருக்கும் மைக்ரோசாஃப்ட் கனவான்கள். இவர்களுடைய வழிநடத்துதலில், எப்போதும் போல் மைக்ரோசாஃப்ட் தொழில்நுட்ப ரீதியிலும், பிஸினஸ் பலத்திலும் தொடர்ந்து வளர்ச்சியடையும் என்று நம்பிக்கை தெரிவித்திருக்கிறார் பில் கேட்ஸ்.

அப்படியானால் இனிமேல் பில் கேட்ஸ் என்னதான் செய்யப் போகிறார்?

ஓய்வுக்குப் பிறகு முழு நேரத்தையும் தமது அறக்கட்டளைப் பணிகளுக்காகச் செலவிடத் திட்டமிட்டிருக்கிறார். தம்முடைய சொத்தின் பெரும் பகுதியைச் சமூகப் பணிகளுக்காக வழங்கிவிட முடிவு செய்திருக்கிறார்.

இதன் மூலம் அடுத்த சில வருடங்களில் அவருடைய சொத்து மதிப்பு கணிசமாகக் குறைந்துவிடும் - உலகின் பெரும் பணக்காரர் என்ற பட்டியலில் இருந்து பில் கேட்ஸின் பெயர் வெளியேறிவிடும். ஆனால், மனித சரித்திரத்திலேயே மிக அதிக அளவு தானம் கொடுத்தவர் என்கிற இன்னொரு பட்டியலில் முதல் இடம் பெற்றுவிடுவார் அவர்.

சிலர், எப்போதும் 'முதல்வர்'கள் தான்!

(முற்றும்)

# பட்டியல்

என்.சொக்கன்

# சூழல் சுற்றுலா!



**பொ**துவாகச் சுற்றுலா என்றால், பணம் செலவழித்தோம்; மனம் மகிழ்ந்தோம் என்ற அளவில் நின்று விடும். ஆனால், சமுதாயப் புரட்சி இழையோடும் சூழல் சுற்றுலா பற்றி நீங்கள் கேள்விப்பட்டதுண்டா?

**அது என்ன சூழல் சுற்றுலா?**

''கோவை வனக் கோட்டத்தில் உள்ள காரமடை வனச்சரகத்தில் 22 மலை வாழ் மக்கள் குடியிருப்புகள் உள்ளன. இவர்கள் இருளர் இனத்தைச் சேர்ந்தவர்கள். இங்குள்ள பெரும்பாலான கிராமங்களில் மின் வசதி இல்லை. மழையை நம்பித்தான் விவசாயம். எனவே வாழ்க்கைத் தரம் குன்றியே உள்ளது. வனத்துறை, மின் வாரியம், குடிநீர், வடிகால் வாரியம் போன்ற அரசுத் துறைகளுக்கும் அருகிலுள்ள தனியார் எஸ்டேட்டுகளுக்கும் மக்கள் கூலி வேலைக்குச் செல்கின்றனர். தங்களது அடிப்படைத் தேவைகளைப் பெறவே போராட்டமான சூழ்நிலை.

அவர்களை மேம்படுத்தும் முயற்சியாக வேலைவாய்ப்பு, பாதுகாப்பு, மருத்துவ வசதிகளை ஏற்படுத்தி வருகிறது வனத்துறை. இவற்றுக்கெல்லாம் உச்சமாக இம்மலைவாழ் மக்களுக்கு நிரந்தர வருமானம் ஏற்படுத்தும் வகையில் 'சூழல் சுற்றுலா' எனும் திட்டத்தை வடிவமைத்துள்ளோம்'' என்று பெருமைகூடிய தன்னடக்கத்துடன் விளக்குகிறார் வனச்சரகர் நாகராஜன்:

''குந்தா மற்றும் பவானி ஆறுகளின் இரு கரைகளிலும் பத்து கிராமங்கள் அமைந்துள்ளன. 'இக் கிராம மக்கள் ஆற்றைக் கடந்து செல்ல பரிசல்களை உபயோகித்து வருகின்றனர். இவர்களது பரிசல் ஓட்டும் திறனையும், நகர்ப்புற மக்களின் சுற்றுலா ஆர்வத்தையும் இணைத்தால்

என்ன? என்ற எண்ணம் எங்களுக்குத் தோன்ற, உடனடியாக முழு மூச்சுடன் இறங்கினோம், 'சூழல் சுற்றுலா'க்களை ஏற்பாடு செய்ய. இதனால் மலைவாழ் மக்களுக்கு ஒரு நிரந்தர வருமானம் கிடைக்கிறது. மேலும் நகர்ப்புற மக்கள் சுற்றுலா சுகத்தை அனுபவிப்பதுடன் அவர்களுக்கு வனம் மற்றும் வன உயிரினங்களின் முக்கியத்துவத்தைப் பற்றியும்,



* மாவட்ட வன அலுவலர் அன்வர்தீன் மற்றும் உயரதிகாரி - மலைவாழ் மக்களுடன் கலந்துரையாடல்...

அவற்றைப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தைக் குறித்தும் விழிப்புணர்வை ஏற்படுத்த முடிகிறது'' என்கிறார் நாகராஜன்.

**இத்திட்டத்தின் செயல்முறையைப் பற்றி விளக்குங்களேன்...**

''இத் திட்டத்தின்படி பத்துக் கிராமங்களை உள்ளடக்கிய இரு கமிட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றில் கிராம மக்களே உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டு தலைவர், பொருளாளர், செயற்குழு உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். காரமடை வனச்சரகர்தான் இக்குழுக்களுக்குச் செயலாளர்.

வனத்துறையில் மலைவாழ் மக்கள் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் வழங்கப்பட்ட தொகையின் ஒரு பங்கு இக் கமிட்டிகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டு, அதன் மூலம் 10 பரிசல்கள், 50 சேர்கள், டேபாய்கள், பரிசல் சவாரி செய்யும் பயணிகளின் பாதுகாப்புக்காக Life Jackets ஆகியவை வாங்கப்பட்டுள்ளன.

சனி, ஞாயிறு தினங்களில் மட்டும் காலை 10 மணி முதல் நண்பகல் 12.30 மணி வரையும், பிற்பகல் 2 மணி முதல் மாலை 4.30 மணி வரையும் இந்தப் பரவசப் பயணம் நடைபெறுகிறது. பரளிக்காடு என்னும் கிராமத்தை யொட்டிய பவானி ஆற்றங் கரையில் பயணம் தொடங்குகிறது. நன்கு பயிற்சி பெற்ற மலைவாழ் மக்களைக்கொண்டு பரிசல்கள் இயக்கப்படுகின்றன. பத்துப் பரிசல்களை சுழற்சி முறையில் ஓட்டுவதற்கு இருபது மலைவாழ் மக்கள் உள்ளனர்.

மதியம் ஒரு மணிக்குப் பழங்கள், மினரல் வாட்டருடன் சுகாதாரமான உணவு வழங்கப்படுகிறது. இதற்குப் பரளிக்காடு கிராமத்தைச் சேர்ந்த மகளிர் சுய உதவிக் குழு ஏற்பாடு செய்கிறது.

மதிய உணவுக்குப் பின், சுற்றுலாப் பயணிகள் வனப் பகுதிக்குள் Trekking-க்கு ஒரு மலைவாழ் மக்கள் இனத்தைச் சேர்ந்த வழிகாட்டியுடன் அழைத்துச் செல்லப்படுகின்றனர்.

பின்னர் அத்திக்கடவு என்னுமிடத்தில் உள்ள ஆற்றில் உல்லாசக் குளியல் முடித்து ஊர் திரும்பலாம்!''



**சூழல் சுற்றுலாவுக்கு மக்களிடையே வரவேற்பு உள்ளதா? அவர்களுக்கு இத்திட்டத்தைப் பற்றி எப்படித் தெரிவிக்கிறீர்கள்?**

''கடந்த ஏப்ரல் ஏழாம் தேதி



* உணவு உபசரிப்பு...

கிடைக்கும் தொகை மலைவாழ் மக்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ள கமிட்டியின் வங்கிக் கணக்கில் நேரடியாகச் செலுத்தப் படுகிறது. இந்தச் சேமிப்புத் தொகை

துவங்கப்பட்ட இந்தச் சூழல் சுற்றுலாவுக்கு ஏராளமான பயணிகள் குடும்பத்துடனும் குழந்தைகளுடனும் வருகின்றனர். உற்சாகத்தை அனுபவித்துச் செல்கின்றனர்.

காரமடையிலிருந்து பில்லூர் செல்லும் வழியில் 45 கி.மீ. தொலைவில் இப் பகுதி அமைந்துள்ளது. ஒண்ணேகால் மணி நேரம் பயணம் செய்ய வேண்டும்.

இதற்காக கோவை மாவட்ட வன அலுவலகத்திலும் காரமடை வனச்சரக அலுவலகத்திலும் முன்பதிவு செய்யும் வசதிகளை ஏற்படுத்தியுள்ளோம்.''

**கட்டண விவரங்கள்?**

''இந்த ஒரு நாள் உல்லாசப் பயணத்துக்கு, பெரியவர்களுக்கு ரூ.300/- வசூலிக்கப் படுகிறது (சாப்பாடு உட்பட). 15 வயது வரை உள்ள சிறுவர்களுக்கு ரூ.200/- வசூலிக்கப்படுகிறது. ஐந்து வயது வரை உள்ள குழந்தைகள் இலவசமாக இந்தச் சுகப் பயணத்தை அனுபவிக்கலாம்.

உல்லாசப் பயணிகளுக்கு வழிகாட்டச் செல்லும் மலைவாழ் மக்களுக்கு ரூ.100/- சேவைக் கட்டணம். இதனைப் பயணிகள் குழுவினர் சேர்ந்து நேரடியாக வழங்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இந்தச் சூழல் சுற்றுலா மூலம்



* வனச் சரக அலுவலர் நாகராஜன்

யிலிருந்து மலைவாழ் மக்களின் அடிப்படை வசதிகளுக்கும் பத்து கிராமங்களில் உள்ள மகளிர் சுய உதவிக் குழுக்களுக்கும் சூழல் நிதி வழங்கி, அவர்களது குடும்ப வருமானத்தை நிரந்தரமாக்கவும் பெருக்கவும் பயன்படுத்தப் படுகிறது.''

**சுற்றுலாப் பயணிகளின் பரிசல் பயணம், இருளிலிருந்து ஒளியை நோக்கிச் செல்ல விழையும் மலைவாழ் மக்களின் வாழ்க்கைப் பயணத்துக்குப் பெரும் பலம் சேர்க்கும் என்பதில் ஐயமில்லை!**

**சூழல் சுற்றுலா செல்லத் தொடர்புகொள்ள வேண்டிய எண்கள்:**

**0422 - 2302925,**
**94433 70311,**
**93605 06639**



# எங்கே செல்லும்

சென்ற வாரம் நடந்த சுல்தான் அஷ்லான் ஷா ஹாக்கிப் போட்டியில் அரையிறுதிக்கு இந்திய அணி தகுதியானபோது ஓர் அவசரச் செய்தி: ஹாக்கியைத் தகுதியிறக்கம் செய்திருக்கிறது இந்திய அரசாங்கம். சிறப்புப் பிரிவிலிருந்த ஹாக்கி, இனிமேல் சாதாரணப் பிரிவுக்கு மாற்றப்பட்டிருக்கிறது. சேதி கேட்ட இந்திய வீரர்களின் மனம் பாறையாகக் கனத்துப் போகிறது.

இன்று வரைக்கும் ஹாக்கி வீரர்களைத் தவிர வேறு எந்த இந்திய விளையாட்டு வீரரும் ஒலிம்பிக் போட்டியில் தங்கம் வென்றது கிடையாது. தொடர்ந்து ஆறு ஒலிம்பிக்கில் தங்க வேட்டை என மொத்தமாக எட்டுத் தங்கங்களை ஹாக்கியால் நாம் பெற்றிருக்கிறோம். அந்தப் பெருமைதான் இன்று வடிந்துபோய்த் தகுதியிறக்கம் ஆகியிருக்கிறது.

கிரிக்கெட்டில் இன்றைக்கு எப்படி ஆஸ்திரேலியாவோ அதுபோல அன்று ஹாக்கியில் இந்தியா. 1928 முதல் 1956 வரை நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் ஆடிய இருபத்து நான்கு மேட்சுகளில் ஒரு தோல்வி கிடையாது. ஒவ்வொரு மேட்சிலும் சராசரியாக ஏழு கோல்கள். 56-ல் நடந்த ஒலிம்பிக் ஹாக்கி இறுதிப் போட்டியில் இந்தியாவிடம் பாகிஸ்தான் தோற்றுப் போனது. அப்போது பாகிஸ்தான் மேலாளர் கடுப்புடன் 'இப்பொழுதுதானே இந்தியாவுடன் ஆட ஆரம்பித்திருக்கிறோம். இனி முடிவுகளில் மாற்றம் வரும் பாருங்கள்' என்றார். சொன்ன சொல் தவறாமல் அடுத்த ஒலிம்பிக் ஃபைனலில் இந்தியாவைத் தோற்கடித்தது பாகிஸ்தான். அதன் பின்பும் இந்தியா கூடுதலாக இருமுறை ஃபைனலில் தங்கம் வென்றது. 1980-க்குப் பிறகு இந்தியாவின் அத்தியாயம் முடிவு பெற்று, ஒலிம்பிக் மற்றும் உலகக் கோப்பைப் போட்டிகளில் செமி ஃபைனல் வரைக்கும்கூட தாண்ட முடியாமல் போனது.

நூற்றைம்பது நாடுகள் ஆடுகிற ஹாக்கி விளையாட்டில் இந்தியா ஆறாவது இடத்தைத் தொடர்ந்து தக்க வைத்திருக்கிறது (பதினைந்து நாடுகள் ஆடும் கிரிக்கெட்டிலும் இந்தியாவுக்கு ஆறாவது இடம்தான்). 'முன்பு ஹாக்கி இந்தியாவின் ஒவ்வொரு தெருவிலும் ஆடப்பட்டு வந்தது. ஆனால், இன்று கிரிக்கெட் மோகத்தில் ஹாக்கி என்பது புராதன ஆட்டமாகி விட்டது. அரசின் இந்த அறிவிப்பு மேலும் ஹாக்கியை படுகுழியில் தள்ளும்' என்கிறார்

* பாஸ்கரன்





# இந்த முடிவு?

கள் சீனியர் வீரர்கள்.

இந்தத் தகுதியிறக்கத்தால் அரசின் நிதி உதவி குறையும். இந்தியாவின் தேசிய விளையாட்டு என்கிற பெருமைக்கு ஆபத்து ஏற்படும் என்று ஆருடம் சொல்லப்படுகிறது. ஆனால், 'ஏற்கெனவே எங்களுக்கு அரசு எதுவும் உதவி செய்வதில்லை. இதனால் பெரிய மாற்றங்கள் வந்துவிடப் போவதில்லை' என்று கூறியிருக்கிறது இந்தியன் ஹாக்கி ஃபெடரேஷன். சமீபத்தில்தான் ஒரு புயலிலிருந்து ஓய்ந்திருந்தது. அதற்குள் இன்னொரு சுனாமி.

இந்திய அணியை இந்த நிலை கோலத்தில் யாரும் பார்த்திருக்கவில்லை. சென்ற வருடம் நடந்த ஏஷியன் கேம்ஸ் போட்டியில் வெறுங்கையோடு திரும்பியது. பன்னிரண்டு நாடுகள் கலந்து கொண்ட உலகக் கோப்பையில் பதினொன்றாவது இடம். காமன்வெல்த் போட்டியில் ஆறாவது இடம். சாம்பியன்ஸ் டிராபியில் கடைசி இடம் என்று இந்திய ஹாக்கி அணியின் உயரம், செருக்கு எல்லாமே மணல் வீடாகக் கரைந்து போனது. இதைச் சாக்காக வைத்து கோச் பாஸ்கரனைக் கைகழுவியது இந்தியன் ஹாக்கி ஃபெடரேஷன். 'கற்காலத்தில் எல்லாரும் வாழ்கிறார்கள்' என்று கோபப்பட்டார் பாஸ்கரன். எல்லாரும் நடுநடுங்கிச் சாகும் அந்த முள் நாற்காலியில் புதிதாக அமர்த்தப்பட்டார் மும்பைக்காரரான கார்வெல்ஹோ.



இவர் 1984 ஒலிம்பிக் போட்டியில் ஆடியவர். 'நான் கேட்கிற அணியைக் கையில் தாருங்கள். நீங்கள் கேட்கும் வெற்றியை நான் தருகிறேன்' என்றார். 'அடுத்த வருடம் பீஜிங்கில் நடக்கப் போகிற ஒலிம்பிக் போட்டிக்கு இந்திய அணி தகுதி பெறாவிட்டால், நானாக முன்வந்து ராஜினாமா செய்வேன்' என்று வந்தவுடன் சவால் விடுத்தார். லேப்டாப்பை வைத்துக்கொண்டு பந்தா காண்பிக்கும் ஆள் இல்லை அவர். 'அட, எல்லாம் வேஸ்ட் சார். வீரர்கள் அறிவுரையை மோசமான அனுபவமா நினைக்கிறாங்க. வீடியோவுல முழு மேட்ச்சையும் பார்த்து குறை நிறைகளைத் தெரிஞ்சுக்க யாரும் விருப்பப்படறதில்லை. புள்ளிவிவரங்களால ஒரு மனுஷனைக் கொல்லக் கூடாது' என்கிறார். எப்படியோ முதல் அசைன்மென்ட்டில் (சுல்தான் அஷ்லான் ஷா) இந்தியாவை மூன்றாவது இடத்தில் அமர்த்திவிட்டார்.

ஏற்கெனவே நிர்வாகக் குளறுபடிகளால் களை இழந்து வர... இந்திய அரசின் குறுகிய சிந்தனையும் செயலும் சேர்ந்து இந்திய ஹாக்கியை எவ்வளவு பெரிய ஆபத்துக்கு இட்டுச் செல்லப் போகிறதோ!

- ச.ந.கண்ணன்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி அறிவிப்பு 2007



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

**விதிமுறைகள் :**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணைய தளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக் கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2007'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 32**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் **ஆகஸ்ட் 5** ஆண்டு மலரில் வெளியாகும். படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**

**முதல் பரிசு ரூ.10,000/- இரண்டாம் பரிசு ரூ.7,500/- மூன்றாம் பரிசு ரூ.5,000/-**

# GOOD SHEPHERD e-SCHOOL

**பள்ளி/கல்லூரி படிக்கப் போகும் மாணவர்/மாணவிகளே!**

இன்டர்நெட்டில் ஒரு முறை பயின்றால் 25 முறை புத்தகத்தில் படிப்பதற்குச் சமம். ஆம், இணைய தளத்தில் Good Shepherd e-School-ல் படிப்பது உங்கள் மூளைத்திறனை அதிகரிக்கச் செய்யும், கவனக் குறைவைப் போக்கும், கவனச் சிதறலை இல்லாமல் ஆக்கும். ஒரு முறை பயின்றால் உங்கள் புத்தகத்தை 25 முறை மீண்டும் மீண்டும் படித்து 25 முறை ஞாபகப் படுத்திக் கொள்வதற்குச் சமம். ஆகவே, உங்கள் படிப்பு சுமையைப் பஞ்சுப் போல எளிதாக்கும். Good Shepherd e-School -ல் இன்றே மிக மிகக் குறைந்த கட்டணத்தில் பயில்வீர்.

## e-School -ல் படிப்பு V Std

NTSE (மாதம் ரூ. 200, 300, 500, 1000 என மத்திய அரசு வழங்கும்)

Sainik School, RIMC, Military School



## Engineering படிக்க +2 தகுதி

IIT / JEE, AIEEE, BITSAT and State Entrance Exams.

## Medical படிக்க +2 தகுதி

AIIMS, PMT, JIPMER, CMC, AFMC at All States MBBS Entrance Exams.

Medical / Engineering மாணவர்களுக்கு Chapterwise Practise நடைபெறும்.

## Engineering மாணவர்கள்

கல்லூரியில் சேர்ந்து aptitude exams முதல்வருடத்திலிருந்து பயிற்சி எடுத்துக்கொள்வது நல்லது. இரண்டாம் ஆண்டு, மூன்றாம் ஆண்டு, நான்காம் ஆண்டு மாணவர் / மாணவிகள் கண்டிப்பாகப் பயின்றால்தான் Campus Interview மற்றும் அதன் பின் வரும் தேர்வுகளில் வெற்றிப்பெற்று கை நிறைய சம்பளம் பெற முடியும்.

## Arts / Science Students:

IAS Exams (all upse exams) Railway Exams, Banking Exams, Staff Selection Commissions Exams, MBA, MCA Ent.Exams, IIIT, IIMS, IIBM, XLRI and other Management Studies..

## Defence:

ARMED FORCES MEDICAL COLLEGE. MILITARY NURSING SERVICES EXAM. NATIONAL DEFENCE ACADEMY COMBINED DEFENCE SERVICES, SSB INTERVIEW Etc. அனைத்துக்கும் எங்களது GOOD SHEPHERD e-SCHOOL - ல் CHAPTER WISE ஆகப் பயின்று, OBJECTIVE WISE QUESTIONS, ANSWERS & Explanations etc. மூலம் படித்தப்பின் அந்தந்த தேர்விற்குரிய Model Exams வெற்றி பெறுவதன் மூலம் உங்களின் வெற்றியை 100 உறுதிசெய்து கொள்ளலாம் எங்களிடம் வெற்றிபெற்று விட்டால் அந்தந்த தேர்வுகளில் 100 சதவிகிதம் வெற்றி உறுதியே. மிக மிகக் குறைந்த கட்டணம், உங்களுக்குரிய தேர்வில் வெற்றிபெறும் வரை e-SCHOOL - ல் பயிலலாம். தற்சமயம் Educational offer -ஆக 25,000க்குரிய பயிற்சிக் கட்டணம் ரூ.1000 மட்டுமே குறைந்த நாட்களுக்கு மட்டுமே இச்சலுகை மேலும் விவரங்களுக்கு

## GOOD SHEPHERED e-SCHOOL

**(HOLY ANGEL'S ONLINE EXAM)**

11/20, தக்குதீன் கான் தெரு, ஆதம்ஸ் மார்க்கெட் எதிரில், திருவல்லிக்கேணி, சென்னை-5.

**CELL : 9360313921**

**www.aptitudeexams.com** **info@aptitudeexams.com**

சீதா ரவி



# யாதும் மறுக்காத பெருமாள்!

* ஸ்ரீ தேவி, பூதேவியுடன் உத்ஸவர்...

படம்: அசோக் கிருஷ்ணசாமி

சென்னை கோயம்பேடில் ஒரு தர்ம ஸம்வர்த்தனி இருக்கிறாள் என்பது பலருக்குத் தெரிய வாய்ப்பில்லை. திருவையாற்றில், காவரிக் கரையில் அருள்புரியும் தர்மஸம்வர்த்தனியைப் போலவே அழகும் அற்புதமும் நிறைந்தவள்! பிரஸித்தி பெற்றுவிட்ட ஒரு தலத்தின் மூர்த்தியை இன்னொரு தலத்திலும் நம் ஆசைக்காக கொலு வைத்து வழிபடுவது நீண்ட கால வழக்கமாகவே இருந்து வருகிறது. அந்த வரிசையில், திருவேங்கடமுடையானைக் காவிரிக் கரையில் குடியேறச் செய்த இடம் தான் குணசீலம் - இத்தலத்தின் தனிச் சிறப்பு, பெருமாள் தன் ஆலயத்தைத் தானே ஆணையிட்டு கட்டுவித்துக் கொண்ட அழகுதான்.

உயர்ந்த பண்புகளை 'குணம்' என்றும் சத்திய மாண்புடன் வாழ்வதை 'சீலம்' என்றும் நாம் குறிப்பிடுகிறோம். இவ்விரண்டு உயர்தன்மைகளையும் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்தான் குணசீல முனிவர். தால்பிய மஹரிஷி என்பவருடைய சிஷ்யர் குணசீலர். ஆசார்யர் தால்பியர், தமது சிஷ்யர்களை அழைத்துக்கொண்டு இமய மலைக்குச் சென்று, வியாஸ முனிவரை வணங்கிவிட்டுத் திரும்புகையில் இன்றைய 'திருப்பதி' க்ஷேத்திரமான திருவேங்கடத்தில்

பெருமாளை தரிசனம் செய்கிறார். எல்லோரும் ஊர் திரும்பத் தயாராக, குணசீலர் மட்டும் அந்தப் பெருமாளைப் பிரிய மனமில்லாமல், தம்முடைய குடிலுக்கு வரும்படி வேண்டிக் கேட்டுக் கொள்கிறார். பெருமாள், பக்தர்களின் மெய்யன்புக்கு இரங்கி வருபவர்தான். ஆனால், அவர் குணசீலருடன் சென்றுவிட்டால், அவரைத் தேடி திருவேங்கடத்துக்கு வரும் பக்தர்களுக்கு யார் ஜவாப் சொல்வது! பார்த்தார் பெருமாள், ''எனக்கு வர ஆசைதான்; ஆனால், நான் இங்கேயே நெடுங்காலம் இருப்பதாக ஏற்கெனவே உறுதியெடுத்துக்கொண்டு விட்டேன்... ஆனால், நீ ஊர் திரும்பி உன் குருநாதரிடம் கலந்தாலோசித்துவிட்டு, என்னைக் குறித்துத் தவம் செய்தாயானால் நிச்சயமாய் வழி பிறக்கும்'' என்று பசியில் அழுத பிள்ளைக்குக் கையில் கற்கண்டு தருவதுபோல் சொல்லி அனுப்பிவிட்டார்!

குணசீல மஹரிஷியும் அந்த உத்தரவாத கற்கண்டை உள்ளத்தில் கசியக்கசிய ஏந்தி வந்து காவேரிக் கரையில் தமது ஆசிரமத்தின் அருகே கடுமையாகத் தவம் செய்தார். இயற்கை சீற்றங்களை வென்று நீடித்த அவருடைய தவம், இந்திரனையே பயப்பட வைத்ததாம். இந்திரன் பிரம்மாவிடம் சென்று கவலை தெரிவிக்க, பிரம்மா குணசீலருடைய தவத்தின் உயர்நோக்கை எடுத்துச் சொல்லி அச்சம் தீர்த்திருக்கிறார்.

விரைவில் பிரம்மா - சரஸ்வதி, ஈசுவரன் - பார்வதி, இந்திராதி தேவர்கள், சனகாதி முனிவர்கள் என்று தேவ லோகமே திரண்டு குணசீலர் ஆசிரமத்தருகே வந்துவிட்டது - பெருமாள் இவருடைய தவத்துக்கு இரங்கி தரிசனம் தருவதைக் காண்பதற்காக!

கருடாழ்வார் மீதமர்ந்து மஹாலக்ஷ்மி சகிதனாய் மஹாவிஷ்ணுவும் வந்து சேர்ந்து, மூவுலகும் காண குணசீலருக்கு தரிசனம் தந்து அருள் புரிந்தான்.

குணசீல ரிஷிக்கு திருவேங்கடமுடையான் தரிசனம் கொடுத்த இடம்தான் காவிரிக் கரையில் (திருச்சி - சேலம் மார்க்கத்தில் 24வது கிலோமீட்டர்) உள்ள குணசீலம்.

இறைவனைக் கண்ட நெகிழ்ச்சியில் மெய்மறப்பதென்ன, பித்தும் பேதைமையும் கொள்வதுகூட அழகுதான். ஆனால், இயல்பில் மனிதனுக்கு இருக்க வேண்டிய சித்தக் கட்டுப்பாடும் சிந்தனை ஆற்றலும் வாய்க்கப் பெறாதவர்களும், பொறி கலங்கிப் போனவர்களும் குணமடைந்து சீலம் வாய்க்கப் பெறுவதற்கும் அதே இறைவனிடம்தான் நாம் பிரார்த்திக்க வேண்டியிருக்கிறது. அதற்கு அனுக்ரஹம் செய்யக்கூடியவன் குணசீலத்துப் பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் என்கிற நம்பிக்கை வலுவாக நிலவுகிறது.

குணசீலருடைய தவத்தை மெச்சி கருடன்



படம்: ஸ்ரீ அரசு



மீது மஹாலக்ஷ்மியோடு பெருமாள் விரைந்து வந்தாரல்லவா? வந்தவர், 'என்ன வரம் வேண்டும்' என்று குணசீலரிடம் கேட்க, முனிவரும் பெருமாள் அவ்விடத்திலேயே தங்கி, வரும் பக்தர்களுக்கெல்லாம் அருள் செய்ய வேண்டும் என்று கேட்டாராம். மஹாவிஷ்ணுவும் கலியுக நாயகனான ஸ்ரீவேங்கடநாதனின் மறு உருவமாக, அழகு பொருந்திய நின்ற திருக்கோலத்தில் குண சீலத்தில் தங்கி நின்றான்.

குணசீலத்துக்கு நாம் சென்றபோது மாலை நேர பூஜை நடைபெற்றுக் கொண் டிருந்தது. கணகணவென்ற மணி ஓசையும், நாதஸ்வர இசையும் காவிரிக் காற்றுடன் கலந்து வந்தன. காவிரி ஸ்நானம் செய்து விட்டு ஈர ஆடையுடன் பக்தர்கள் நேர்த்திக் கடன் செலுத்த வந்தவண்ணம் இருந் தனர்.

பூஜையும் நைவேத்யமும் முடிந்ததுமே, வரிசையில் நின்று வினை தீர காத்திருக் கும் மன பாதிப்புக்குள்ளான தனது குழந் தைகளுக்கே முதல் சேவை தருகிறான் பெரு மாள். திருமஞ்சன (அபிஷேக) தீர்த்தம் அவர் கள் முகத்தில் தெளிக்கப்படுகிறது. நாற்பத் தெட்டு நாட்களுக்கு (ஒரு மண்டலம்) இந்தக் கோவில் வளாகத்திலேயே தங்கி விரதம் அனுஷ்டிக்க வசதி செய்திருக்கிறார்கள். பல நியமங்களும் சிறிதும் முறை பிறழா மல் காக்கப்பட வேண்டும் என்று இங்கே வலியுறுத்தப்படுகிறது.

குணசீலர் மிகச் சிறு பாலகனாக இருந்தபோதே பிரஸன்ன வேங்கடேச பெரு மாள் அவருக்குக் காட்சி கொடுத்து விட் டாராம். காவிரிக் கரையில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டபோது, சிறுவன் பெருமாளி டம் பிரியா விடை பெற்று வேறிடம் சென்று விட்டான். காலப்போக்கில் புற்றுமண் பெரு மாளை மூடிக் கொண்டது. அப்பகுதியில் வாழ்ந்த இடையர்கள் தாங்கள் கறந்த பால் குடங்களிலிருந்து மாயமாய் மறைந்து போகும் விந்தையை அனுபவித்திருக் கிறார்கள். அவர்களுள் ஒருவருக்கு, தான் புற்றுள் உறைவதை உணர்த்தியிருக்கிறான் பெருமாள்.

சோழ அரசன் ஞானவர்மனிடம் சென்று இந்த விந்தையை அவர்கள் தெரிவிக்க, அவனும் நேரில் வந்திருக்கிறான். எதிரே வந்த வேதியர் சொன்னபடி குடம் குடமாகப் பாலைக் கொண்டு வந்து புற்றைக் கரைக்க, பெருமாள் காட்சி தந்திருக்கிறார்! சிலை உருவமாக இருந்த இறைவன், ராஜாவுக்குப் பிரத்யக்ஷமாகத் தெரிந்திருக்கிறான். அதோடு தமக்குக் கோவில் கட்டும்படியும் அதனை **வைகானஸ ஆகம** முறைப்படி அமைக்கும் படியும் ஆணையிட்டிருக்கிறான். அரசனும் அவ்வாறே செய்து தினமும் பெருமாளை வழிபட்டதுடன் சனிக்கிழமைதோறும் ஏகாந்தமாக (தனியாக) பெருமாளை தரிசனம் செய்து, அவர் வழிகாட்டியபடி ராஜ்யத்தை ஆட்சி செய்திருக்கிறான்.

இந்தக் கதையைக் கேட்கிறபோது, இன்றைய ஆட்சியாளர்களும் இந்த மாதிரி இறைவழி காட்டலில் நல்லாட்சி வழங்க மாட்டார்களா என்ற ஏக்கமே மேடும்! மத உணர்வுகளையும் வழிபாட்டுச் சடங்குகளை யும் ஒதுக்கி வைத்துவிட்டுப் பார்த்தால்கூட இது ஓர் அற்புதமான ஏற்பாடு. ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர் உன்னதமான சூழலில் இருக்கிறபோதுதானே அவருடைய

வைகானஸ ஆகமம் என்பது ஸ்ரீ விகநஸசார்யர் என்பவரால் உருவாக்கப்பட்டது. **இறைவன் பூவுலகில் சிலை வடிவங்களில் குடியேற முடிவு செய்தபோது பிரம்மாவை அழைத்து, அத்தகைய வடிவங்களைப் படைத்து, பூஜை முறைகளை வகுக்கக்கூடிய மானுடர்களைப் படைக்கும்படி கேட்டானாம். பிரம்மாவோ, அது தம்மால் இயலாத காரியம் என்று மறுத்திருக்கிறார்! பெருமான் தாமே அப்பொறுப்பை ஏற்று, தமது திருவுள்ளத்திலிருந்தே சகல ஞானங்களும் படைத்த விகநஸரையும், அத்ரி, ப்ருகு, பரத்வாஜர், கௌதமர் ஆகிய முனிவர்களையும் படைத்திருக்கிறார். அவர்களுள் விகநஸர் விதித்ததுதான்** வைகாநஸ ஆகமம். விகநஸருக்கும் குணசீலத்தில் சந்நிதி இருக்கிறது.

மனசாட்சியின் குரல் அவரது செவிகளுக்கு எட்டும்! மற்ற நேரங்களில் 'ஜால்ரா' சப்தமோ சச்சரவு நாராசமோதானே கேட்கிறது!

இன்றைக்கும் நாம் குணசீலம் பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் கோவிலில் அவன் சன்னதியில் நிற்கிறபோது புற ஓசைகளும் உலகியல் சிந்தனைகளும் அற்றுப்போய் ஆழ்ந்த நன்றியுணர்வுடன் அமைதியில் தோய முடிகிறது.



✱ ஸ்ரீ பிரஸன்ன வேங்கடாசலபதி

நமது குறைகளை மறந்து, சொந்த பிரார்த்தனைகளிலிருந்து விடுபட்டு, வந்திருக்கும் பக்தர்களுக்கும் வரவியலாத மற்றவர்களுக்குமாகச் சேர்த்து இறைஞ்சத் தோன்றுகிறது.

திருப்பதி பெருமாளைக் காட்டிலும் இந்தக் குணசீலப் பெருமாள் சிறிய அளவினர் என்பதால் அருகில் நிற்கிறபோது நேத்திரங்கள் நம்மைப் பார்ப்பது போல் அருள் பாலிக்கிறார். சங்க-சக்கரங்களும் வரம் தரும் வலக்கரமும் ஒயிலாக இடுப்பில் பதிந்த இடக்கரமுமாக சேவை தருகிறார். கழுத்திலே புரளும் மலர்மாலைகள், துளசி மாலைகளுக்கு இடையே அழகிய,பெரிய சாளக்கிராம மாலை. 'யாதும் மறுக்காத மலையப்பனா'ன அவன் திருமார்பில் 'ஏதும் தர நிற்கும் கருணைக் கடல் அன்னை' மஹாலக்ஷ்மி! நாம் வழங்கும் மலர்க் காணிக்கையை அவ்வன்னைக்கு பட்டர்கள் சூட்ட, அக்கணமே நமக்குச் சகல செல்வங்களும் கிடைத்த மகிழ்ச்சி ஏற்படுகிறது. துழாய் தீர்த்தம் நறுமணத்துடன் நெஞ்சை நிறைக்கிறது. கல்கண்டு பிரசாதம் தருகிறார்கள்.

குணசீலம் பிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் 2004-ஆம் ஆண்டு செய்விக்கப்பட்டு, கோயில் நவீனப்படுத்தப்பட்டு, பளிச்சென்று காட்சி தருகிறது. எங்கும் அழகிய மர வேலைப்பாடுகள். நூதனமான ஒரு கண்ணாடி அறையும் பெருமாளுக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கும்பாபிஷேகமும் பெருமாளின் திருவுள்ளம் அறிந்த பிறகே மேற்கொள்ளப்பட்டு வைகானஸ முறைப்படியே செய்விக்கப்பட்டிருக்கிறது.

இறைவனின் ஆணைப்படி கட்டப்பட்ட கோயில்; அவன் திருவுள்ளத்திலிருந்தே தோன்றிய உத்தமர் விதித்த முறையில் கட்டப்பட்டிருக்கிறது. திருப்பதியைப் போலவே இங்கே அனைத்து உத்ஸவ முறைகளும் அனுஷ்டிக்கப்படுகின்றன, திருப்பதிக்குச் செல்ல இயலாதவர்கள் இங்கேயே பிரார்த்தனைகளைச் செலுத்திக் கொள்ளலாம்.

- குணசீலத்தின் சிறப்புகளைப் பட்டியலிட்டுக் கொண்டே போகலாம்... எந்தப் பட்டியலுக்குள்ளும் அடக்கிவிட முடியாதவை. பிரஸன்ன வெங்கடாசலபதி பெருமானின் புகழும் அருளும்!

***கோயில் திறந்திருக்கும் நேரம்:***
***காலை 6.30 - 1 மணி***
***மாலை 4.00 - 8.30 மணி***
***தொடர்புக்கு: 04326 - 275210,275310***

# கருத்துக்



“உங்களைத்தான்... 'உயர் மந்திரி யார்?'ன்னு கருத்துக் கணிப்பு நடத்தறாங்களாம்... டீ.வி. சீரியலுக்குக் கீழே டைட்டில் நியூஸா ஓடுது... எழுந்து ஆக வேண்டியதைப் பாருங்க'' என்று அமைச்சர் மாண்புமிகு மாங்கனியின் சம்சாரம் மாதுளம்கனி அவரைத் துயில் எழுப்பித் துரிதப்படுத்தினாள்.

இது மாதிரி ஒரு கருத்துக் கணிப்பு வரும் என்று மந்திரி எதிர்பார்த்திருந்தார். அதற்கான முன்னேற்பாடுகளைச் சமீபகாலமாகத் தன் ஆதரவாளர்களைக் கொண்டு செய்து வைத்துத் தயாராய் இருந்தார்.

# கடுப்பு!

''முதல்ல டி.வி.யை ஆஃப் பண்ணு'' என்று மனைவிக்கு உத்தரவிட்ட கையோடு, தன் கைபேசி மற்றும் தொலைபேசிகளுடன் உட்கார்ந்து மாநிலமெங்குமுள்ள தன் சகாக்களுக்குக் கட்டளைகளை வீசத் தொடங்கிவிட்டார்.

''யாரு கதிர்வேலுவா? என்ன வேலூர்ல இன்னும் சர்வே ஆளுங்க வரலையா... வேலூர், திருப்பத்தூர், வாலாஜான்னு எவன் வந்து சர்வே எடுத்தாலும் 'மாண்புமிகு மாங்கனி'ன்னு சொல்லச் சொல்லு... தலைக்கு அம்பது, நூறு செலவானாலும் கவலை இல்லை... மத்த மந்திரி பேரை எவனாவது சொல்லப் போறது தெரிஞ்சா அவனை கொஞ்சம் ஸ்பெஷலா கவனி... குவார்ட்டரோ... ஃபுல்லோ கேட்டதை வாங்கிக் குடுத்துச் சரிக்கட்டு... என்ன செலவானாலும் கவலைப்படாதே... இந்த சர்வேல மட்டும் என் பேர் வரட்டும்... உனக்குத்தான் அந்த கான்ட்ராக்ட்...''

''தூத்துக்குடி செந்திலா? அட... அந்த ஏரியாவுல செபஸ்டின்ராஜ் பேரைத்தான் ஜனங்க சொல்லுவாங்க. உஷாரா கேன்வாஸ் பண்ணுங்க... அடுத்தநா ஏதாவது 'அழகான மந்திரி யார்?', 'வெள்ளை வேட்டி அமைச்சர் யார்?'ன்னு நிறைய சர்வே வரத்தான் போவுது... அதுக்கெல்லாத்துக்கும் அவன் பேரையே சொல்லிக்கட்டும். இந்த ஒரு தபா மட்டும் என் பேரைச் சொல்லட்டும்... அப்படி இந்த சர்வேல நான் ஜெயிச்சா, இன்னும் நாப்பது டாஸ்மாக் கடைகளை தூத்துக்குடி ஏரியால தொறக்க ஏற்பாடு பண்றேன்னு சொல்லு''- விடாமல் மாங்கனி தன் நாடு தழுவிய சகாக்களுடன் பேசிக்கொண்டிருந்தார்.

ஏதோ தேர்தல் ஜுரோடு வாக்குறுதிகளை வீசியபடி மாங்கனி இந்தக் கருத்துக் கணிப்பை எதிர்கொண்டது அவருடைய தொண்டர்களுக்கு மிகவும் ஆச்சர்யமாக இருந்தது. ஏதாவது சொல்ல வந்தாலும் பேச விடாமல் வாயை அடைத்துவிட்டார்.

இடையே அவருக்கும் ஆதரவாகத் தகவல்கள் வராமலில்லை.

''அண்ணே! எங்க மாவட்டத்துல ஏற்கெனவே இன்னிக்கு சர்வே எடுத்துட்டுப் பூட்டானுங்கோ... ஜனங்ககிட்டே போய் 'நீங்க எந்த அமைச்சர் பேரைச் சொன்னீங்க'ன்னு கேட்டா, ஒருத்தன் வுடமாம 'அட! நம்ம மாங்கனியைத் தவிர வேறு யார் பேரை இதுக்குச் சொல்ல முடியும்'னு சொல்றானுங்க... அண்ணனுக்கு படு பாப்புலாரிட்டி... இங்க நீங்க செலவுக்குக் கொடுத்தது பத்தலே... கொஞ்சம் அனுப்பி வையுங்க அண்ணே.''

மாங்கனி கட்டுக்கடங்காத குதூகலத்தோடு அந்த வாராந்தரியின் வருகைக்காகக் காத்திருந்தார்.

அவர் எதிர்பார்த்துக் காத்திருந்த அந்த வாராந்தரி வந்தேவிட்டது.

அட்டையில் மாங்கனி அட்டகாசமான புன்னகையோடு பளபளத்தார். சர்வேயின் நாயகன் அவரே என்பது உறுதியாகியிருந்தது.

முட்டி மோதிக்கொண்டு மாங்கனி ஆட்கள் அத்தனை கடைகளிலும் வாராந்தரியை வாரிக் கொண்டு வந்து குவித்ததென்னவோ வாஸ்தவம்தான். இருந்தாலும் அத்தனை இதழ்களையும் மாங்கனி எரித்துச் சாம்பலாக்கிக் கொண்டிருந்தார்.

'ஊழல் மந்திரி யார்?' என்பதை 'உயர் மந்திரி யார்' என்று டி.வி.யில் தவறாகப் படித்துவிட்டு இந்த விபரீதத்துக்கு வித்திட்ட தன் சம்சாரத்தை நம்பியதை எண்ணி, நொந்து நூடுல்ஸாகியிருந்தார் மந்திரி மாங்கனி. ○

• அகிலா கார்த்திகேயன்






''எவனோ ஒருவன் தன்னைச் சுற்றி நடக்கிற தவறுகளைக் கேள்வி கேட்க ஆரம்பித்தால் என்ன ஆகும்? அதுதான் மாதவனுக்கு நடக்கிறது. மாதவன் ஒன்றும் பெரிய ஹீரோ இல்லை. போராளி குணம் கொண்டவருமில்லை. சென்னைப் புறநகரான நங்கநல்லூரில் வசிக்கும் மிடில் கிளாஸ் சம்சாரி. தினமும் மின்சார ரயில் ஏறி பேங்க் வேலைக்குப் போகிறவர். மாலை வீடு திரும்பும்போது, அப்படியே கடைக்குப் போய் காய்கறி வாங்கிக்கொண்டு வருகிறவர். தொணதொணக்கும் மனைவி; மழலையில் கொஞ்சும் ஒரே குழந்தை. அவர் வாழ்க்கையை யதார்த்தத்துடன் திரையில் காட்டி இருக்கிறேன். மாதவன் இதில் மின்சாரமாய் மினிரப் போகிறார் பாருங்கள்'' என்கிறார் இயக்குனர் நிஷிகாந்த். முப்பத்தேழு வயது மும்பை இளைஞர்.



* நிஷி

இவர் இயக்கி கடந்த வருடம் வெளிவந்த மராத்தி படம் 'டொம்பிவிலி ஃபாஸ்ட்', இருபத்தேழு வாரங்கள் ஓடியிருக்கிறது. உலக நாடுகள் பலவற்றிலும் நடந்த திரைப்பட விழாக்களில் திரையிடப்பட்டு, முப்பத்து நான்கு விருதுகளைப் பெற்றிருக்கிறது. இந்தப் படம்தான் இப்போது மாதவன் நடிக்க, 'எவனோ ஒருவன்' என்கிற பெயரில் தமிழில் எடுக்கப்பட்டு வருகிறது.

''மும்பையின் நடுத்தரக் குடும்பங்கள் நிறைந்த புறநகர்ப் பகுதிகளில் ஒன்றுதான் 'டொம்பிவிலி'. அங்கு வசிக்கும் சாமான்ய மக்களின் சௌகரியம் கருதி ஓடுகிற புறநகர் ரயில்

# ர
# தவன்!



டொம்பிவிலி ஃபாஸ்ட். மும்பையின் டொம்பிவிலி, தமிழ்ப் படத்தில் நங்கநல்லூர் ஆகி இருக்கிறது. டொம்பிவிலி ஃபாஸ்ட் படத்தைப் பார்த்து அதில் லயித்துப் போன இந்தி இயக்குனர்கள் அப்பாஸ்-மஸ்தான் இருவரும், அப்படத்தை இந்தி அல்லது தமிழில் தயாரிக்க விரும்பினார்கள். நான் தமிழை டிக் செய்துவிட்டேன். இந்தியில் எடுத்தால் என் முதல் படத்துக்கும், இந்தப் படத்துக்கும் இந்தியில் வசனம் இருக்கும் என்பது தவிர, வேறு எந்த வித்தியாசமும் இருக்காது. அது எனக்குச் சவாலாகவே இருக்காது. முதல் படத்தின் ஜெராக்ஸ் பிரதிபோல இன்னொரு படம் எடுப்பதில் எனக்கு ஆர்வமில்லை. எனவே, தமிழில் எடுக்கலாம் என்று ஆர்வம் காட்டினேன்.

படப்பிடிப்பு ஆரம்பிப்பதற்கு முன்னால் சுமார் ஒன்றரை மாத காலம் நான் சென்னையில் தங்கி இருந்தேன். நெரிசல் மிகுந்த காலை, மாலை நேரங்களில் சென்னை நகர பஸ்களிலும், மின்சார ரயிலிலும் மக்களோடு மக்களாகக் கலந்து பயணம் செய்தேன். கையேந்தி பவன்களில் இட்லி சாம்பாரும், இடியாப்பம் குருமாவும் சாப்பிட்டேன். பிளாட்ஃபாரங்களிலும், மெரினா பீச்சிலும் காலார நடந்தேன். தியேட்டருக்குப் போய் வெயில், வேட்டையாடு விளையாடு போன்ற படங்களை ரசிகர்களுடன் அமர்ந்து பார்த்தேன். இப்படித் தமிழ் மண் வாசனையை நன்றாக முகர்ந்து, உணர்ந்துகொண்ட பிறகே என் பட வேலைகளில் இறங்கினேன். நடிகர் மாதவனும் இயக்குனர் சீமானும் இந்தப் படத்தில் எனக்குத் தோள் கொடுக்கிறார்கள். படத்துக்கு வசனம் எழுதி இருப்பவர் மாதவன்தான். படம் ஜூன் மாதம் ரிலீஸ் ஆகும்'' என்கிறார் நிஷிகாந்த்

- கௌதம் ராம்

# ரஜினி... யாருக்கு



## கிரேஸியைக் கேளுங்கள்



● மணிமேகலை, மதுரை

*உங்கள் சொத்து என்று நீங்கள் கருதுவது எது...?*

ஆருயிர்கூட அல்ல... எனக்கு ஆறாயிரம் உயிர்த் தோழனான எனது பால்ய நண்பன் 'சு.ரவியின்' நட்பு... நம்மாழ்வார் கூறும் 'கிளரொளி இளமை' கெடுவதற்கு முன்பே என்னைத் தடுத்தாண்டு... என்னை கம்பன், காளிதாசனோடு கைகுலுக்க வைத்து, ரவிவர்மாவின் வர்ணங்களை என் ரத்தத்தில் ஓடவைத்து, இளமையில் கல்லாக இருந்த என்னை இன்று சிலையாக மாற்றிய சிற்பி சு.ரவி... சித்திரமும் கைப் பழக்கம் செந்தமிழும் நாப் பழக்கம் என்றால் சித்திரம், செந்தமிழ் இரண்டுமே எனக்கு ரகஸ்ய-ஸ்னேகிதன் 'ரவி'ப் பழக்கம். எனக்கு 'கோஸ்ட்-ரைட்டர்' கிடையாது. ஆனால் என்னை எழுத வைக்கும் 'ஏஞ்சல் -ரைட்டர்' சு.ரவிதான்... கட்டை விரல் கேட்காத இந்த துரோணன்தான் எனக்கு இன்று சோற்றைப் போடும் சொத்து.

● ஏ.எஸ்.யோகானந்தம், ஔவையார் பாளையம்

*சிரிக்காதவர்களை 'உ.மூ.' அதாவது உம் மணாமூஞ்சிகள் என்கிறோம். சிரிப்பவர்களை...?*

உ.பி. என்று சொல்லலாம். அதாவது சி.மு.வில் உ.மூ... சி.பி.யில் உ.பி.. மறுபடியும் அதாவது சிரிப்பதற்கு முன் உம் மணாமூஞ்சி... சிரித்த பின் உற்சாகப் பிரியன். பி.கு. : மாயாவதியின் உ.பி. வெற்றி பலரை உ.மூ. ஆக்கியிருக்கும்.

● எம்.ஆர்.கான், இளையான்குடி

*ஆதாரமில்லாமல் வதந்திகளைப் பரப்புகிறார்களே...?*

வதந்தி பரவாமல் இருக்கக் காதில்

# கமல்... லிஃப்ட்?



தடுப்பு ஊசி போட்டுக் கொள்ளுங்கள். அதையும் மீறி வதந்தி தொற்றிக் கொண்டால் 'இடுக்கண் வருங்கால் நகுக' மாதிரி 'Rumour வருங்கால் Humour' உதாசீனமாகச் சிரித்து, உத்வேகத்தோடு பரப்ப வந்தவரைச் சிந்திக்க வையுங்கள்.

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

***அதிர்ஷ்டம் என்றால் என்ன?***

அது இஷ்டத்துக்கு வருவதுதான் அதிர்ஷ்டம்.

● **சீதாராமன், கோயம்புத்தூர்**

***இன்றைய சூழ்நிலையில் எப்படி கிரேஸி கெடாமல் இருப்பது?***

பால், பழத்தோடு ஃப்ரிட்ஜுக்குள்ள போய் குந்திக்குங்க. எந்தச் சூழ்நிலையிலும் கெடாமல் ஆயுசுக்கும் அழுகாம அன்று பார்த்த அதே சீதாராமனா இருப்பீங்க.

● **சம்பத், வில்லிவாக்கம்**

***அதென்ன ஸ்டோரி - ஸ்க்ரீன் ப்ளே - டயலாக்?***

மைக்கேல் மதன காமராஜன் படத்தில் காமேஸ்வரன் ஒரு குக்... இது கதை. சாம்பாரில் தவறுதலாக மீன் விழுந்து காமேஸ்வரன் திண்டாடுவது திரைக்கதை. 'வாட் டு யூ மீன், ஐ மீன் வாட் ஐ மீன்' என்று காமேஸ்வரனின் வெந்த சாம்பாரில் வேலைப் பாய்ச்சுவது வசனம்.

● **ஜெயராமன், சென்னை**

***நீங்கள் ஸ்கூட்டரில் போய்க் கொண்டிருக்கிறீர்கள். பஸ் ஸ்டாப்பில் கமல், ரஜினி... யாருக்கு லிஃப்ட் கொடுப்பீர்கள்...?***

கமலிடம் ஸ்கூட்டரைக் கொடுத்துவிடுவேன். கமல் தமது நண்பர் ரஜினிக்கு லிஃப்ட் கொடுத்துவிட்டுத் தன் வீட்டில் இறங்கிக் கொள்வார். மறுநாள் வழக்கம் போல கமல் வீட்டுக்குச் செல்லும் நான், என் ஸ்கூட்டரை எடுத்துக் கொள்வேன். வரும் வழியில் பஸ் ஸ்டாப்பில் ஐஸ்வர்யா ராயும், ராணி முகர்ஜியும் லிஃப்ட் கேட்டால் ராணி முகர்ஜிக்குத்தான் லிஃப்ட் கொடுப்பேன். ஐசுக்குத்தான் கல்யாணமாயிடுச்சே! ●



# ரேஷன் கார்டு



ரேஷன் கார்டு - ஒருவர் இந்திய நாட்டின் பிரஜை என்பதை ஆதாரபூர்வமாக அறிவிக்கும் அடிப்படை அடையாளம். அரசு உதவிகளையும் சலுகைகளையும் பெறுவதற்கான நுழைவுச் சீட்டு. ரேஷன் கார்டு மூலம் கிடைக்கும் சலுகை விலைப் பொருட்கள் தேவையில்லை எனினும், அதனை அடையாள அட்டையாகப் பயன்படுத்தும் மத்தியதர வர்க்கமும் இருக்கிறது; ரேஷன் கார்டு பெறுவதற்கான வழிமுறைகள் தெரியாத குடிசைவாழ் வர்க்கமும் இருக்கிறது. சரி, ரேஷன் கார்டைப் பெறுவதற்கான வழிமுறைகள் என்ன? இதோ...



- சென்னையைப் பொறுத்தமட்டில் புதிய ரேஷன் அட்டை வாங்குவது தொடர்பான எல்லா தேவைகளுக்கும் சிவில் சப்ளைஸ் மண்டல உதவி ஆணையரை அணுக வேண்டும். மற்ற மாவட்டங்களில் வசிப்பவர்கள் தாலுகா வழங்கல் அதிகாரியை அணுக வேண்டும்.

- ஏற்கெனவே உங்கள் பெயர் ஏதாவது ஒரு ரேஷன் அட்டையில் இடம் பெற்றிருக்கும் பட்சத்தில், புதிய அட்டை வாங்க விரும்பினால், சம்பந்தப்பட்ட அதிகாரியை அணுகி, அந்த அட்டையில் உங்கள் பெயரை நீக்கியதற்கான சான்றிதழை முதலில் பெற வேண்டும். பின்னர் புதிய அட்டைக்கான விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து, உங்கள் பெயர் நீக்கச் சான்றிதழுடன், பழைய ரேஷன் அட்டை நகலை இணைத்துக் கொடுக்க வேண்டும். நேரிடையான சோதனைக்குப் பின் உங்கள் பெயரில் புது அட்டை வழங்கப்படும்.

- வேலை மாற்றம் ஏற்பட்டு வேறு ஊருக்குச் சென்றால், புது ரேஷன் அட்டைக்கு என்ன செய்வது? ஏற்கெனவே இருந்த ஊரில் பயன்படுத்திய ரேஷன் அட்டையை உரிய அதிகாரியிடம் ஒப்புவித்து, ஒப்புவிப்புச் சான்றிதழ் பெற்று, பிறகு அதனை இணைத்து புதிய அட்டைக்கு விண்ணப்பிக்க வேண்டும்.

இப்படி வேலை மாற்றலாகி வருபவர்



# பெறுவது எப்படி?

கள் வேறு மாநிலங்களில் இருந்து வந்தால், அவர்கள் கொடுக்கும் ஒப்புவிப்புச் சான்றிதழ், அவர்கள் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு கொடுக்கப்பட வேண்டும்.

● பல வருடங்களாக ஒரே முகவரியில் வசித்தும் ரேஷன் அட்டை இல்லையெனில், அதிகாரியை அணுகி, விண்ணப்பத்துடன் உங்கள் முகவரியைத் தாங்கியுள்ள வாக்காளர் அடையாள அட்டை, டெலிபோன் பில் ஆகியவற்றுடன் மனுச் செய்யலாம். அவர் முதலில் எதிர்ப்பில்லா சான்றிதழ் கொடுப்பார். அதை வைத்துக்கொண்டு பின்னர் முறைப்படி புதிய ரேஷன் அட்டைக்கு மனுச் செய்யவும்.

● ரேஷன் அட்டையில் புதிதாக ஒருவரது பெயரைச் சேர்க்க வேண்டுமா? அவர் பெரியவராக இருப்பின், வேறொரு அட்டையில் அவர் பெயர் இடம் பெற்றிருந்தால், பெயர் நீக்கச் சான்றிதழுடன் விண்ணப்பிக்க வேண்டும். சிறியவராக இருப்பின் பிறப்புச் சான்றிதழை வைத்து விண்ணப்பிக்க வேண்டும்.

● ரேஷன் அட்டை தொலைந்து போய்விட்டால் என்ன செய்வது? ரேஷன் கடைக்குச் சென்று அட்டையின் வரிசை எண்ணைத் தெரிந்துகொண்டு புதிய அட்டைக்கு விண்ணப்பம் செய்யுங்கள். உரிய பரிசோதனைக்குப் பின் புதிய அட்டை வழங்கப்படும்.

● ரேஷன் அட்டையில் முகவரியை மாற்ற நினைத்தாலோ அல்லது வேறொரு ரேஷன் கடையில் பொருள்களை வாங்க நினைத்தாலோ, நீங்கள் முதலில் குறிப்பிட்ட ரேஷன் கடையுடன் தொடர்பு கொண்டு, பின்னரே அதிகாரியிடம் விண்ணப்பிக்க வேண்டும்.

● ரேஷன் அட்டை விவகாரத்தில் புதிய அட்டை வாங்கும்போதுதான் முறையான விண்ணப்பத்தைப் பயன்படுத்த வேண்டும். மற்ற தேவைகளுக்கு வெள்ளை பேப்பரில் விண்ணப்பித்தால் போதும். எந்தச் சேவைக்கும் கட்டணம் கிடையாது. புதிய அட்டை கொடுக்க மூன்று மாதங்களாகக் கூடும்.

● இப்போது ரேஷன் அட்டை வழங்கும் விஷயத்தில், சம்பளத்தைத் தொடர்புபடுத்துவது கிடையாது.

**ரேஷன் அட்டை தொலைந்து போய்விட்டால் என்ன செய்வது?**

- **கௌசி**

"லட்சுமிக்கு இன்னொரு பெயர் மாயா. அதற்காக, லட்சுமியை வணங்குவதை விட்டுவிட்டு, என்னை வணங்குங்கள் என்று நான் கேட்கவில்லை. லட்சுமியையே தொடர்ந்து வணங்குங்கள்; ஆனால், வோட்டை மட்டும் எனக்குப் போடுங்கள்" - இப்படிப் பிரசாரம் செய்து தனக்கும், தன் கட்சி வேட்பாளர்களுக்கும் வோட்டு கேட்டார் மாயாவதி. பகுஜன் சமாஜ் கட்சி, சமாஜ்வாதி கட்சி, பா.ஜ.க. காங்கிரஸ் என்று அனேகமாக உ.பி.யின் அனைத்துத் தொகுதிகளிலுமே நான்கு முனைப் போட்டி. கருத்துக் கணிப்புகள், தொங்கு சட்டசபை என்று ஆருடம் சொல்லிக் கொண்டிருக்க, சத்தம் போடாமல் மாயாஜாலம் செய்து காட்டிவிட்டார் மாயாவதி.



# மாயாஜாலம்!



1956 ஜனவரியில் பிறந்த மாயாவதிக்கு இப்போது வயது ஐம்பத்து ஒன்று. அப்பா பிரபு தயாளுக்குத் தபால் இலாகாவில் சூப்பர்வைசர் வேலை.

அம்மா பெயர் ராம்ரதி. மாயாவதி படித்தது டெல்லியில். பி.ஏ.பி.எட். டெல்லியின் பல்வேறு பள்ளிக்கூடங்களில் ஏழெட்டு ஆண்டுகள் ஆசிரியையாக வேலை பார்த்துவிட்டு, அதன்பின் அரசியலுக்கு வந்தார். 1984-ஆம் ஆண்டு, கன்ஷிராம் பகுஜன் சமாஜ் கட்சியை ஆரம்பித்தபோது, அவரை தனது அரசியல் ஆசானாக ஏற்றுக்கொண்டு அந்தக் கட்சியில் சேர்ந்தார். அடுத்த மூன்றாண்டுகளில் பாராளுமன்றத்துக்கான தேர்தல்களில் போட்டியிட்டுத் தோல்வி கண்டார். 1989-ல் முதல் முறையாக பாராளுமன்றத்துக்குள் நுழைந்தார். அதன் பிறகு 1994-ல் மாநிலங்களவைக்குச் சென்றார்.

1993-ஆம் ஆண்டில், உபி.யில் முலாயம் சிங் முதலமைச்சராவதற்கு ஆதரவு அளித்தார். ஆனால், நாளடைவில் இரு கட்சிகளுக்குமிடையிலான உறவில் விரிசல் ஏற்பட்டது. இதன் உச்சகட்டமாக 1995 ஜூன் மாதம் இரண்டாம் தேதி, லக்னோ விருந்தினர் மாளிகையில் ரௌடிகளால் தாக்கப்பட்டார் மாயாவதி. அதிர்ஷ்டவசமாகக் காயமில்லாமல் தப்பித்தவர், மறுநாளே பா.ஜ.க. ஆதரவுடன் முதல் முறையாக முதலமைச்சராகப் பதவி ஏற்றார். ஆனால், ஐந்து மாதங்கள்கூட அவரால் பதவியில் நீடிக்க முடியவில்லை.

**மா**யாவதி உ.பி.யின் முதல்வராகப் பதவி ஏற்பது இது நான்காவது தடவை.

## "ஒரு தலித் பெண்மணி இந்தியாவின் பிரதமராகும் நாள் வெகு தூரத்தில் இல்லை!"

ஆனால், இதுவரை முழுமையாக ஐந்தாண்டுகள் அவர் பதவியில் இருந்தது இல்லை. 1996-ல், உ.பி. சட்டமன்றத் தேர்தலில் இரண்டு தொகுதிகளில் போட்டியிட்டு, இரண்டிலும் வென்று, ஒன்றை ராஜினாமா செய்தார். அந்தத் தேர்தலில் யாருக்கும் மெஜாரிட்டி கிடைக்காத நிலையில் பா.ஜ.க.வும், பகுஜன் சமாஜ் கட்சியும் சுழற்சி முறையில் ஆளுக்கு ஆறுமாதம் முதலமைச்சர் பதவி என்று வினோதமான ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டன. அதன்படி மாயாவதி இரண்டாம் முறையாக முதலமைச்சர் நாற்காலியில் அமர்ந்தார். ஆறுமாதம் பதவியை அனுபவித்துவிட்டு அதன்பின், பா.ஜ.க.வுக்கு ஆதரவை விலக்கிக் கொள்வதாக அறிவித்துவிட்டார். இரண்டு கட்சிகளும் சட்டமன்றத்துக்குள்ளாகவே மோதிக் கொண்டது வரலாறு. 2002 மே மாதம் மூன்றாம் முறையாக உ.பி. முதல்வரானார் மாயாவதி. பதினைந்தே மாதங்களில் தாஜ் ஹெரிடேஜ் காரிடார் ஊழலில் பதவி பறிபோனது. சுப்ரீம் கோர்ட் ஆணைப்படி சி.பி.ஐ. நடத்தும் அந்த வழக்கு இன்னும் முடியவில்லை.

தம்மைத் தாழ்த்தப்பட்ட மக்களின் ஏகபோக பிரதிநிதி என்று இதுவரை முழங்கிக் கொண்டிருந்த மாயாவதி, இந்தத் தேர்தலில் சில புதிய கணக்குகளைப் போட்டு வெற்றிக்கனியைப் பறித்திருக்கிறார். முன்னெப்போதுமில்லாதபடி, 403 சட்டமன்றத் தொகுதிகளில் 93 தலித்துகளுக்கு மட்டுமே தேர்தலில் டிக்கெட் கொடுத்தார். இவர் கட்சி சார்பில் களமிறக்கப்பட்ட பிராமணர்கள் 89 பேர். தவிர, 61 தொகுதிகளில் முஸ்லிம் வேட்



பாளர்களையும் நிறுத்தினார். ஜாதி வோட்டு வங்கிதான் உ.பி. தேர்தலின் ஹீரோ என்பதைப் புரிந்துகொண்டு, இப்படிப் பல்வேறு தரப்பினரையும் தேர்தலில் அரவணைத்துச் சென்று, மறுபடியும் தனிப் பெரும்பான்மையுடன் ஆட்சியைப் பிடித்துவிட்டார்.

"இந்தியாவிலேயே மிகப்பெரிய மாநிலம் உத்தரப்பிரதேசம்தான். அதன் மக்கள் எனக்கு அமோகமான அதரவு அளித்திருக்கிறார்கள். ஆந்திர சட்டமன்றத்தில் எங்கள் கட்சி சார்பில் ஓர் உறுப்பினர் இருக்கிறார். மற்ற மாநிலங்களிலும் எங்கள் கட்சியை வளர்த்து, மத்தியில் ஆட்சியைப் பிடிப்பதுதான் என் லட்சியம். ஒரு தலித் பெண்மணி இந்தியாவின் பிரதமராகும் நாள் வெகுதூரத்தில் இல்லை." என்கிறார் மாயா(ஜால)வதி.

- எஸ். சந்திரமௌளி

# ஒப்பனை முகங்கள்!

தஞ்சை சகா

ஒப்பனை செய்துவிட்டு
நகர்ந்த பின்னும்
ஒட்டிவைத்திருக்கிறது
என் முகத்தை

அன்று முதல்
முகமில்லாமல் வாழும்
நிலைதான் எனக்கு

இன்று வரை
மீட்க முடியவில்லை

அயல் நாகரிக மோகத்தால்
அசல் நாகரிக முகத்தை
இழந்தவர்கள் வரிசையில்
இப்போது நானும்...

நீங்களேனும் கவனமுடன்...

செல்லும் வழியெல்லாம்
உங்கள் முகத்தை
எதிர்பார்த்துக்
காத்திருக்கிறது
முகந்தின்னும்
கண்ணாடி!



CUB
TRUST AND EXCELLENCE - SINCE 1904

# நீங்கள் மகிழ்ந்திட
# நெஞ்சம் நெகிழ்ந்திட




டெபாசிட்டுகளுக்கு வழங்கும் வட்டி

# 10.50%
வரை

| காலம் | மூத்த குடிமக்களுக்கு | மற்றவர்களுக்கு |
|---|---|---|
| 1 வருடம் | 10% | 9.75% |
| 2 வருடங்கள் | 10.50% | 10.25% |

*நிபந்தனைகளுக்கு உட்பட்டது




## சிட்டி யூனியன் பாங்க் லிட்.

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001, தமிழ்நாடு.
போன் : 0435-2432322 ஃபேக்ஸ் : 0435-2431746
E-mail : rpm@cityunionbank.com Website : http://www.cityunionbank.com
SMS : "CUBDEPOSIT" to 9900654321

<u>நமது அனைத்து வங்கிக் கிளைகளும் இணையதளம் மூலம் இணைக்கப்பட்டுள்ளது.</u>

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள கிளையை இன்றே தொடர்பு கொள்வீர்

சென்னை (தி.நகர்)-24340010, காஞ்சிபுரம் - 27223883, புதுச்சேரி-2331272, விழுப்புரம்-222313, கடலூர்-230467, சிதம்பரம்-222114, மயிலாடுதுறை-222156, கும்பகோணம் மெயின்-2421058, தஞ்சாவூர்-230943, திருச்சி-2704180, மதுரை-2348883, கோயம்புத்தூர் (ராம் நகர்) - 2232393, ஈரோடு-2258821, சேலம்-2260134, கரூர்-230346, நாமக்கல்-221096, திருச்செங்கோடு-256356, திருப்பூர்-2247248, இராஜபாளையம்-230432, காரைக்குடி-236524, புதுக்கோட்டை-221739, சிவகாசி-220181, திருநெல்வேலி-2337349, நாகர்கோயில்-225353, தூத்துக்குடி-2321343, விருதுநகர்-243962, ஹைதராபாத்-23228358, பெங்களூர் (சுல்தான்பேட்)-22870328, மும்பை (கார் வெஸ்ட்) - 26463047, டெல்லி (கரோல்பாக்) - 28758696. கொல்கத்தா - 22107141.

மேலும் இந்தியா முழுவதும் கிளைகள்.

**வாழ்க்கை முழுவதும் உங்களுடன்**



* விளையாட்டுத் திருவிழாவில் நக்கீரன் கோபால், இணையமைச்சர் வேலு...

'பல்லாங்குழியா... அப்படின்னா என்ன?' என்று கேட்கின்றன இன்றைய குழந்தைகள். அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் ஸ்கூல், ஹோம் ஒர்க், பரீட்சை, ரேங்க் ஷீட்தான். விளையாட்டு என்பதே இன்றைய குழந்தைகளிடம் வழக்கொழிந்து வர, பழங்கால விளையாட்டுகள் மக்களிடம் மறக்கப்பட்டே விட்டன. இந்நிலையில் அவற்றுக்குப் புத்துயிர் கொடுக்க முன் வந்திருக்கிறார் ரோகிணி. இவர் எழுத்தாளர் சா. கந்தசாமியின் துணைவியார்.

''முன்னே எல்லாம் நானும் கீழ் வீட்டு மாமியும் தாயம் விளையாடி இருக்கிறோம். இப்போ நானும் என் பேத்தி மானசாவும் பல்லாங்குழி ஆடுறதால ரொம்ப உற்சாகமா இருக்கோம். சமீபத்துல கனடாவிலுள்ள சம்பந்தி வீட்டுக்குப் போயிருந்தோம். அங்கே முட்டி வலியைப் போக்க அவங்க பல்லாங்குழி ஆடி, கைக்கும் விரல்களுக்கும் பயிற்சி கொடுக்கறாங்களாம்! அங்க நிறைய தமிழ்க் குடும்பங்க இருக்கு. அத்தனை குழந்தைங்களும் பெரியவங்க கூட பொறுமையா பல்லாங்குழி ஆடறாங்க. கைக்கும் கண்ணுக்கும் காலுக்கும் பயிற்சி கொடுக்கணும்னே பல்லாங்குழி, பாண்டி, ஏழாங்காய் மாதிரி ஆட்டங்களை கிராமங்கள்ல ஆடிட்டிருந்தாங்க.

இதுக்கெல்லாம் ஒரு விழா எடுக்கணும்னு கனிமொழியிடம் சொன்னேன். உடனேயே சம்மதிச்சாங்க. அதே மாதிரி மதன் சார் ரொம்ப உற்சாகத்தோடு, 'கட்டாயம் வரேன்'னார். ரயில்வே துணை அமைச்சர் வேலு சந்தோஷமா வந்து கலந்துக்கிட்டு, ஏழு வயசான என் பேத்திகூட பல்லாங்குழி ஆடி ஜெயிச்சிட்டார்! 'நக்கீரன்' கோபாலும் ரொம்ப ஆர்வமா கலந்துக்கிட்டார்'' என்கிறார் ரோகிணி கந்தசாமி.

'மூச்சுப் பயிற்சிக்கும் விளையாட்டு இருக்காமே...' என்றால் உற்சாகமாகி விடுகிறார்....

''ஆமா. புளியங்கொட்டைகளைத் தரையில் வச்சு முழு மூச்சா ஊதணும். ஊதினதும் தனித்தனியா பிரிஞ்சு போறதையெல்லாம் பொறுக்கி எடுத்து

வைக்கணும். சேர்ந்தாப்பல இருக்கற மத்ததையெல்லாம் ஒண்ணொண்ணா, இன்னொரு காய் அசங்காம எடுக்கணும். அசங்கினா அவுட்! யார் நிறைய புளியங்கொட்டை கலெக்ட் பண்றாங்களோ அவங்க ஜெயிச்சிடறாங்க.

இப்படித்தான் ஏழாங்காய் ஆட்டமும். காயைத் தூக்கி மேலே போட்டு ஒவ்வொண்ணா, ரெண்டு ரெண்டா, மூணு, நாலாப் பிடிக்கணும். இதுல கைக்கு மட்டுமில்லாம கண்ணுக்கும் பயிற்சி கிடைக்குது.

எல்லாத்துக்கும் மேல பாட்டிக்கும் பேத்திக்கும் அத்தைக்கும் மருமகளுக்கும் உள்ள உறவைப் பலப்படுத்திக்கிறதுக்கு இந்த விளையாட்டுகள் ரொம்பவே உதவுது''என்று கூறும் ரோகிணி,

''சைதை ரவிங்கற காங்கிரஸ் கவுன்சிலர் நந்தனம் விளையாட்டுத் திடல்ல பழங்கால விளையாட்டு உள் அரங்கு கட்டித் தரேன்னிருக்காரு. அப்படி அமைஞ்சா ரொம்ப மகிழ்ச்சியாக இருக்கும்'' என்கிறார்.

''இந்தப் பழங்கால விளையாட்டுகள் மறுபடி புழக்கத்துக்கு வரணும். பல்லாங்குழி செய்ற மரத்தச்சர்களுக்கும், அதுக்கு பெயின்ட் பண்ற கிராமத்துக் கலைஞர்களுக்கும் வேலை வாய்ப்புக் கிடைக்குமே!''

ரோகிணி கந்தசாமியின் முயற்சிகள் விளையாட்டாகத் தெரியவில்லை.

- சாருகேசி

# மூச்சுப் பயிற்சிக்கு ஒரு விளையாட்டு!




* தமிழக திட்டக் குழுத் தலைவர் நாகநாதன், கனிமொழியுடன் ரோகிணி கந்தசாமி...

# கொசு

## பா.ராகவன்

கடற்கரையில் அதிசயமாகக் கூட்டம் இல்லாதிருந்தது. தவிரவும், கவியத் தொடங்கியிருந்த இருளுக்குள் ஒளிய இடம் தேடி அலைகள் நெருக்கியடித்து முந்தியதில், கருமையின் இருவேறு வண்ணங்கள் மேலும் கீழுமாகக் கண்முன் குவிந்தன. இதமான இந்தச் சூழல் நிரந்தரமானால் எத்தனை நன்றாக இருக்கும் என்று முத்துராமன் நினைத்தான். பரவசத்தில் சட்டென்று அருகே அமர்ந்திருந்த சாந்தியின் இரு கன்னங்களை ஏந்தி முத்தமிட நெருங்குபவன் போல் அருகே தன் முகத்தைக் கொண்டு வந்தான்.

''ஐயோ..'' என்றாள் சாந்தி.

சட்டென்று கரங்களை விலக்கிக் கொண்டவன், ''மன்னிச்சிரு சாந்தி. ரொம்ப சந்தோசமா இருந்திச்சா? அதான் கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டுட்டேன்.'' என்று அரையடி நகர்ந்து அமர்ந்தான். இருளில் சாந்தி வெட்கப்படுவது போலிருந்தது. அழகாக இருந்தது. இன்னொரு முறை செய்யலாமா என்று யோசித்தான். வேண்டாம் என்று கட்டுப்படுத்திக் கொண்டு, அப்படியே சரிந்து படுத்து, தலைக்குக் கையை முட்டுக்கொடுத்தபடி அவளைப் பார்த்தான்.

''நல்லாருக்கில்ல? ஆறு நாள்ல மாநாடு. பன்னெண்டு நாள்ல கல்யாணம்!''

சாந்தி சிரித்தாள். ''எப்பப் பாரு மாநாட்டு நெனப்புதானா?''

''இருக்காதா பின்ன? சொன்னேனல்ல? எவ்ளோ பெரிய வேலை குடுத்திருக்காரு எங்க எம்.எல்.ஏ.ன்னு யோசிச்சிப் பாரு.''

சாந்தி அவனை மிகவும் ஆழமாக ஊடுருவுவது போலப் பார்த்தாள். அவளுக்குத் தன் அரசியல் கனவுகளைப் புரியவைத்தே தீருவது என்று அவன் முடிவு செய்து கொண்டிருந்தான். அதனால்தான் திருநெல்வேலியிலிருந்து திரும்பியவுடன் மற்ற அனைத்தையும் தள்ளி வைத்துவிட்டு அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டு கடற்கரைக்கு வந்திருந்தான்.

''இந்தா பாரு. நான் சொல்ல நெனைக்கறதையெல்லாம் சொல்லிடுறேன். ஒனக்கு என்னா புரிஞ்சிதுன்னு சொல்லு. புரியலன்னாலும் பரவால்ல; கேட்டுக்க. இதான் வாழ்க்கைன்னு முடிவு பண்ணிட்டேன். நான் கனவுலகூட நெனைக்கல. என்னமோ வட்டச் செயலாளரு தயவுல குப்பத்துக்கு நாலு ரோடு வரும், தண்ணிக் கொழா வரும், கொசு மருந்து அடிப்பாங்க.. அத்தோட சரின்னு நெனச்சேன். அந்த வேலை அப்படியே நிக்குது இன்னிக்கி. எவன் என்னா செஞ்சான்னு தெரியல. ஆனா எம்.எல்.ஏ. கூப்ட்டு விட்டு வேற வேல குடுக்குறாரு. பாளையங்கோட்டை மாநாட்டுக்கு வர்ற தலைவரு ஃபேமிலிய கவனிக்கற வேலை. இதனால என் வாழ்க்கைல என்னமோ மாறுதல் வரப்போவுதுன்னு தானே அர்த்தம்?''

''அ... ஆமா'' என்றாள் தயங்கியபடி.

''சாந்தி, உம் புருசன் வெறும் டைலர் இல்ல. நாளைக்கு நான் கண்டிசனா எம்.எல்.ஏ. ஆவேன். அப்பால மினிஸ்டர் ஆவேன். எங்கப்பன், சித்தப்பன் கோட்டைகட்டி வீணாப் போன எல்லாத்தையும் சேத்துப் புடிப்பேன்.'

சாந்தி மெல்லிய குரலில் துவங்கினாள், ''உங்க லட்சியமெல்லாம் நல்லாத்தாங்க இருக்குது. ஆனா நீங்க என்னா செய்யப்போறிங்கன்னு ஒரு செகண்டு யோசிச்சிப் பாருங்க? பச்சையா சொல்லணும்னா நெல புரோக்கர் வேலை! உங்க ஊரு எம்.எல்.ஏ.வும் அந்த ஊரு எம்.எல்.ஏ.வும் கொடநாட்ல நூறு ஏக்கரு

வளைச்சிப் போட்டு வெச்சிக்கிறாங்க. அதை சல்லிசு ரேட்டுல புடிச்சிக் குடுத்துர முடியும். இத்த தலைவரு சம்சாரத்தான்ட எடுத்துச் சொல்லி மேட்டர முடிச்சிக் குடுத்தா, அவங்களுக்கு எதுனா நல்லது நடக்கும். இதானே?''

''எதுக்கு என்னை வுடறாங்க? அத்தை நீ யோசிச்சியா?'

அவள் யோசித்தாள். காரணம் ஏதும் தெரியவில்லை. ஆனால் முத்துராமன் சொன்ன காரணம் ஏற்கும்படியாக இல்லை.

இரு எம்.எல்.ஏ.க்களுக்கும் தலைவர் சம்சாரத்துடன் நேரடிப் பழக்கம் ஏதும் கிடையாது. முறையான அறி முகம் இனிமேல் - இந்த மாநாட்டை ஒட்டி நேரப் போவது தான். முதல் சந்திப்பிலேயே நூறு ஏக்கர் வருகிறது, வேண்டுமா என்று கேட்பதில் அவர்களுக்குச் சிக்கல் இருக்கிறது. தவிரவும் அவர்கள் வளைத்துப் போட்டிருக்கிற இடம் என்றால், வர்த்தகப் பேச்சாகிவிடும். மூன்றாம் நபர் ஒருவர் இடம் குறித்து எடுத்துச் சொல்லி, எம்.எல்.ஏ.க்கள் முன்னின்று முடித்துத் தருவார்கள் என்கிற மாதிரி விஷயத்தைத் திருப்பச் சொன்னால் பலனளிக்கும்.

''எனக்கு சுத்தமா வெளங்கல'' என்றாள் சாந்தி.

'வெளங்கலியா? ரொம்ப ஈசி சாந்தி. எவனோ வெச்சிருக்கற நெலம்ங்கற மாதிரி ஒரு செட்

# 20



டப்பு. நம்ம எம்.எல்.ஏ.ங்க முடிச்சிக் குடுப்பாங்கன்னு சொல்லி நெருக்கமா யிட்டா, அப்பால ஒரு தொடர்பு கிடைக் கும். இவங்க என்னா செய்யப்போறாங்க? பக்காவா ரிஜிஸ்டிட்ரேஷன் முடிச்சிட்டு நயா பைசா வேணாம், அம்மிணிக்கு காணிக்கைன்னு சொல்லிருவாங்க.''

''ஐயோ! நூறு ஏக்கரு காணிக்கையா?'

''பின்ன? அரசியல் சாந்தி! நூறு ஏக்க ரெல்லாம் ஒண்ணுமே இல்ல.''

''பதிலுக்கு என்னா கெடைக்கும்?''

''அக்டோபர்ல மந்திரிசபை விஸ்தரிக் கப் போறாங்களாம். அத்த கணக்குப் பண்ணித்தான் இவங்க இந்த ப்ளான் பண்றாங்கன்னு நெனைக்கறேன்.''

அவளுக்கு உண்மையிலேயே ஒன்றும் புரியவில்லை. தலைவர் மனைவிக்கு நூறு ஏக்கர் தோட்டம் கிடைத்துவிட்டுப் போகட்டும். எம்.எல்.ஏ.க்கள் அமைச்சர் களாகட்டும். இவனுக்கு என்ன லாபம் அதில்?

''தெரியல சாந்தி. கவுன்சிலர் ஆக்கு வாரு. இப்பத்திக்கி அதுதான் முடியும். ஆனால், அஞ்சு வருசத்துல எம்.எல்.ஏ. ஆயிரணும்னு ஒரு இது இருக்குது.''

''அது எப்படிங்க முடியும்? இந்த எம்.எல்.ஏ. இப்பமே செல்வாக்கோடத் தானே இருக்காரு? மினிஸ்டர் ஆயிரு வாருன்னு வேற சொல்லுறீங்க. அப்புறம் நீங்க எங்கேருந்து எம்.எல்.ஏ. ஆவுறது? இவரு ரிடையர் ஆவுற வரைக்கும் காத்தி ருப்பீங்களா?''

முத்துராமனுக்குத் திக்கென்றிருந்தது.

''என்னா சொல்லுறதுன்னு புரியல சாந்தி. அரசியலுங்கறது ஆபீசு உத்தியோ கம் மாதிரி கெடையாது. எப்ப, எவனுக்கு பிரமோசன் கிடைக்கும்னு சொல்ல முடியாது. இலக்கு வேணும். கொஞ்சம் நேக்கு வேணும். அப்பப்ப தப்புதண்டா செய்ய வேண்டி வரும்.'

''இதுவரைக்கும் என்ன தப்பு செஞ் சிருக்கீங்க?''

''ஒண்ணுமில்ல சாந்தி. வட்டச் செயலாளருக்கு இதுவரைக்கும் நான் திருநெல்வேலி போயிட்டு வந்த மேட்டரு தெரியாது. என்னிய நம்பி அவர் வுட்டுட் டுப் போன குப்பத்து வேலைங்க அப் படியே கெடக்குது. ஏண்டா முடியலன்னு கேட்டாக்கா என்னா சொல்லுறதுன்னு தெரியல. தப்புன்னு பாத்தா அதுதான். ஆனா, வட்டத்துக்கு பயந்துக் கிட்டு இங்க இருந்திருந்தன்னா, எம்.எல்.ஏ. தொடர்பு கிடைச்சிருக்காது.''

சாந்தி வெகுநேரம் அமைதியாக இருந்தாள். பிறகு உறுதியான குரலில் சொன்னாள். ''ஒண்ணு சொல்லட்டுங் களா? நீங்க என்ன வேணா செய்யிங்க. ஆனா சாக்கிரதையா இருங்க. உங்கள புடிச்சிருக்கு. கட்டிக்கிட்டா நல்லா இருப் பம்னுதான் தோணுது. ஆனா அரசிய லெல்லாம் நம்மள மாதிரி சாமானியப் பட்டவங்களுக்கு சரிப்படுமான்னு ஒரு



''என்னது... சைபர் க்ரைம் தடுப்புக் குழுவில் உன்னைச் சேர்க்கணுமா? அப்படி என்ன அனுபவம் வெச்சிருக்கே...''

''படிச்ச காலத்தில் ஒரு பரீட்சை விடாம சைபர் வாங்கின ஆதாரங்களை எடுத்து வந்திருக்கேன் சார்.''

- வி.ஆர்.கிருத்திகா

கவலை இருக்குது. உங்கள நான் எதுக்கும் தடுக்க மாட்டேன். ஆனா என்னியப் பத்தி எப்பவும் நெனைப் பீங்களா?'

முத்துராமனுக்குத் திக்கென்றிருந்தது. அவள் கண்ணோரம் திரண்டு நின்ற ஒரு துளியைச் சடாரென்று துடைத்து, நெருங்கித் தோளில் கைவைத்து அணைத் துக்கொண்டான்.

''சே, என்னா பேசுற? சினிமா டைலாக்கு மாதிரி சொன்னாத்தான் லவ்வா? உன்னிய எப்படி நான் மறப் பேன்? பெரிசா ஆவணும்னு நெனைக் கறதெல்லாமே ஒனக்காகத்தான் சாந்தி!''

அவள் எழுந்து கண்ணைத் துடைத் துக் கொண்டாள். ''சரி, எந்திரிங்க. நேரம் ஆயிருச்சி. போவோம்'' என்று சொன்னாள்.

முத்துராமன் எழுந்துகொண்டான். எடுத்து வந்திருந்த பைக்கில் அவளை எக்மோர் குப்பத்தருகே கொண்டு இறக்கிவிட்டுவிட்டு, திரும்ப வீடு வந்து சேரும்போது மணி ஒன்பதாகியிருந்தது.

சாந்தியின் அப்பாவும் அம்மாவும், தான் இப்படி அவளை வெளியே அழைத்துச் சென்று வருவது குறித்து விமர்சனம் ஏதுமில்லாமல் இருப்பது அவனுக்கு ஆறுதலாக இருந்தது. சற்று நேரம் பேசிவிட்டு, காஃபி குடித்துத் திரும்ப வீடு வந்தபோது, வாசலில் இரண்டு கார்கள் நிற்பதைக் கண்டான்.

யாராக இருக்கும் என்று நினைத்த படி உள்ளே போகவிருந்தவனை, தம்பி சடாரென்று வாசலிலேயே தடுத்து, பின்பக்கம் தள்ளிக்கொண்டு போனான்.

''என்னடா?''

''உள்ள வராதீங்கண்ணே. சிங்காரண் ணன் வந்திருக்காரு. கையில அருவா ளோட ரெண்டு பேருகூட வந்திருக் காங்க. கொலவெறியில நிக்குறாரு. என்னா ஏதுன்னு புரியல. உன்னிய ரெண்டுல ஒண்ணு பாக்காம போவ மாட்டேன்னு சொல்லுறாரு. ஒண் ணுமே புரியலண்ணே.''

*(தொடரும்)*



## முதன் முதலாக...

**சி**ன்னத்திரை வரலாற்றிலேயே முதல் முறையாக ஏ.ஆர்.ரஹ்மான் ஓர் இசைத் திறமை போட்டிக்கு நடுவராக வருகிறார். 'ஊ...லலல' என்ற அந்த நிகழ்ச்சி தமிழ், தெலுங்கு ஆகிய இரு மொழிகளிலும் ஒளிபரப்பாகவிருக்கிறது. சரிகம இந்தியா நிறுவனத்தின் தயாரிப் பான இந்த நிகழ்ச்சிக்கு, ஏ.ஆர்.ரஹ் மானை வளைத்துப் போட்டது எப்படி? சரிகம நிறுவனத்தின் கிரியேடிவ் இயக் குனரான பி.ஆர்.விஜயலட்சுமியிடம் கேட்டபோது, ''ஏ.ஆர்.ரஹ்மானை நடுவ ராகப் பங்கேற்க வைத்து, இசை சம் பந்தமான நிகழ்ச்சி ஒன்றைத் தயாரிக்க விரும்பினோம். அவரை அணுகி விஷ யத்தைச் சொன்னபோது 'வழக்கமான சிறந்த பாடகரைத் தேர்ந்தெடுக்கும் நிகழ்ச்சிகளிலெல்லாம் பங்கேற்க எனக்கு விருப்பமுமில்லை; நேரமு மில்லை. இசையை அடிப்படையாகக் கொண்ட கிரியேடிவான நிகழ்ச்சி என் றால் பார்க்கலாம்'' என்று சொல்லிவிட் டார். 'சொந்தமாக இசை அமைக்கும் திறமைகொண்ட இசைக் குழுக்கள் பங்கேற்கிற நிகழ்ச்சியை நடத்தலாமா?' என்று கேட்டபோது சம்மதித்தார். ஆக, ஜூன் மாதக் கடைசியில் ஆரம்பமாகும் 'ஊ... லலல' நிகழ்ச்சி பல்வேறு ஊர் களிலும் நடைபெறவிருக்கிறது'' என்கிறார் விஜயலட்சுமி.

**- மானஸா**

# சுகம் தரும் சூரியகாந்தி...

"சூரியகாந்தி விதைகள் ஒரு வீட்டில் இருக்கிறது என்று தெரிந்தால் போதும்... அதன் கொள்முதல் வியாபாரிகள் விவசாயிகளின் வீடு தேடி வந்து வாங்கிச் செல்வார்கள்!'' என்கிறார் திருச்சிக்கு அருகிலிருக்கும் சோபனபுரம் விவசாயி குழந்தைவேலு. இத்தகைய பெருமை வாய்ந்த சூரியகாந்தி இன்றைக்கு விவசாயிகளின் பணப் பயிர்.

சூரியனைப் போல சூரியகாந்திக்கும் வருடத்தில் பருவமே கிடையாது. எந்த மாதத்திலும் நடலாம். எண்ணி நூறு நாள் சாகுபடிப் பயிர்.

''தோட்டத்து மண் மிருதுவாக மாறும் வகையில் மூன்று முறை அடியுரம் போட்டு, ஒரு ஏக்கருக்கு ரெண்டு கிலோ சூரியகாந்தி விதைகளை நட்டால் இலாபமோ இலாபம்!'' என்கின்றனர் விவசாயிகள்.

விதைகள் நட்ட ஏழு நாட்களுக்குள் செடிகள் மண்ணுக்கு மேலே எட்டிப் பார்க்குமாம். அவை வளர்ந்த முப்பது நாட்களுக்குள் களை எடுக்க வேண்டும். பின்னர் செடி உரமிட வேண்டும். விதைகள் நட்ட நாற்பத்தைந்து நாட்களுக்குள் எல்லாச் செடிகளும் நன்கு வளர்ந்து மொட்டுவிடத் துவங்கிவிடும். அறுபது நாட்களுக்குள் பூ பூத்துக் குலுங்கும். பிறகு, விதைகள் முற்ற முப்பது நாட்கள் ஆகும். அந்த முப்பது நாட்களிலும் தினசரிப் பூக்கள் மலர்ந்து சிரிப்பது பார்வைக்கு விருந்தளிக்கும்.

'விதைகள் நட்டு அறுவடைக்கு வரும் மூன்று மாதங்களுக்குள் ஆறு முறை தண்ணீர் விட்டால் போதும். சூரியகாந்தி விதைகள் பச்சைக் கிளிகளுக்கும் குருவிகளுக்கும் மிகவும் பிடித்தமான உணவு. எனவே அவற்றிலிருந்து விதைகளை முதலில் காப்பாற்ற வேண்டும்.

ஒரு ஏக்கருக்கு ஆயிரம் கிலோ அறுவடையாகும் வீரிய ஒட்டுரக சூரியகாந்தி இங்கு பயிரிடப்படுகிறது. செலவுகள் போக, ஒரு ஏக்கருக்குப் பதினைந்தாயிரம் ரூபாய் மிச்சமாகும். மற்ற விவசாய விளை பொருட்கள்போல, இதனை வெளியே கொண்டு போய் விற்று வர வேண்டியதில்லை. அதிகமாகப் பயன்படும் சமையல் எண்ணெய் வித்துக்களில் ஒன்று சூரியகாந்தி. இவற்றுக்கு ஏக கிராக்கி இருக்கிறது'' என்கிறார் குழந்தைவேலு.

திருச்சி, உறையூர் பக்கத்து கிராமங்களில் சூரியகாந்தி சாகுபடி லாபத்தைப் போட்டுத் தாக்க, திருச்சியிலேயே வாழை பயிர் செய்த விவசாயிகள் வயிற்றிலடிக்கப்பட்டு அமர்ந்துள்ளனர்.

இன்னும் இருபது, முப்பது நாட்



* குழந்தைவேலு

# ...வயிற்றிலடித்த வாழை...!

களில் வாழைத்தார் வெட்டி விடலாம்... பட்ட கடன் அடைந்துவிடும்... அடகு வைத்த நகை வீடு வந்து சேரும்... அடுத்த வருட வாழைக்கு அச்சாரம் கிடைத்துவிடும்' என்று வாழை விவசாயிகளின் மனசுக்குள் எழும்பியிருந்த மனக்கோட்டை, மணல் கோட்டையாகியிருக்கிறது. கடந்த ஏப்ரல் 23 மற்றும் மே 3 ஆகிய இரு நாட்களில் சுழன்று வீசிய சூறாவளிக் காற்றால் சின்னாபின்னமாகியிருக்கின்றன பயிரிடப்பட்டிருந்த வாழைகள்.

தமிழகத்திலேயே வாழை உற்பத்தியில் முதலிடம் வகிப்பது திருச்சி மாவட்டம்தான். இங்கே மொந்தன், பூவன் மற்றும் நேந்திரன் வாழைகள் பயிரிடப்படுகின்றன.

**மத்திய, மாநில அரசுகள் விவசாயத்தை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்வதில்லை!**

தொட்டியம், காட்டுப்புத்தூர், முசிறி, பெட்டவாய்த்தலை, சிறுகமணி, பெருகமணி, ஜீயபுரம், குழுமணி, அல்லூர், வயலூர், சோமரசம்பேட்டை, நாச்சிக்குறிச்சி, மல்லியம்பத்து, லால்குடி மற்றும் பூவாளூர் போன்ற பகுதிகளில் சுமார் மூவாயிரம் ஏக்கரில் வாழை சேதமாகிப் போனதாகச் சொல்லப்படுகிறது.

ஓர் ஏக்கர் வாழைச் சாகுபடிக்கு அறுபதாயிரம் ரூபாய் உற்பத்திச் செலவு ஆகிறதாம். சேதங்கள் ஏதுமின்றி வாழைத் தார் வெட்டி அனுப்பினால், ஓர் ஏக்கருக்கு சுமார் முப்பதாயிரம் ரூபாய் வரை லாபம் கிட்டுமாம். ஆனால், முதலுக்கே முழு மோசம் என்கிற அளவில் விவசாயிகள் தற்போது நிம்மதி இழந்து தவிக்கின்றனர்.

''நம்ம நாட்டுல மற்ற தொழில்கள், வியாபாரங்கள் ஏதும் பாதிக்கப்பட்டா உடனே மத்திய - மாநில அரசுகள் அதில் தலையிட்டுப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்கின்றன. ஆனால், விவசாயத்தை ஒரு பொருட்டாகவே எடுத்துக்கொள்வதில்லை. திருச்சி மாவட்ட வாழைப் பயிர் சேதங்களுக்காக ஓர் ஏக்கருக்கு ஆயிரம் ரூபாய் வீதம் நிவாரணத் தொகை வழங்கப்படுமென சமீபத்தில் சட்டமன்றத்தில் அறிவித்திருக்கிறார் வேளாண்மைத் துறை அமைச்சர். ஒரு ஏக்கரில் அழிந்து கிடக்கும் வாழைகளின் உற்பத்திச் செலவு மட்டுமே அறுபதாயிரம் ரூபாய். எனவே பாதிக்கப்பட்ட வாழை விவசாயிகளுக்கு ஏக்கருக்கு சுமார் முப்பதாயிரம் ரூபாய் நிவாரணத் தொகையாகத் தந்து உதவிட முன் வர வேண்டும் தமிழக அரசு!'' என்று கோரிக்கை வைக்கிறார் திருச்சி மாவட்ட கவுன்சிலரும் (தி.மு.க.), மாவட்ட திட்டக் குழு உறுப்பினருமான சிங்காரம்.

*செய்தி, சித்திரம் :*

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




மேஷம்: எதிலும் கவனமாக இருக்கவும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வியாபாரம் சற்று மந்தமாக இருக்கும். திடீர் தனயோகம் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும். ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வருதல் நலம்.

ரிஷபம்: இந்த வாரம் மேன்மையான பலனை எதிர்பார்க்கலாம். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். வேலைப் பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் லாபம் கிட்டும். மன தைரியம் மிகுந்து காணப்படும். ராகு/கேது வழிபாடு செய்து விளக்கு ஏற்றி வர, நற்பலன் கிட்டும்.

மிதுனம்: எடுத்த காரியம் வெற்றி பெறும். தனவிருத்தி ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். ஆரோக்கியம் சீர்படும். கல்வி வளம் மேலோங்கும். வியாழக்கிழமைதோறும் குரு பகவானை வழிபட்டு விளக்கு ஏற்றி அர்ச்சனை செய்து வழிபட, நற்பலன் உண்டாகும்.

## பரத்வாஜ் பதில்கள்

**என்** மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? வரன் எப்படி அமையும்?

- என்.ஜெயராமன், நங்கநல்லூர்

உங்கள் பையனுக்கு 28 வயதில் திருமணம் முடியும். படித்த, பண்புள்ள, வேலையில் உள்ள பெண் அமைவாள்.

**என்** மகளுக்குக் கல்யாணத் தடை ஏற்படுகிறது. பரிகாரம் செய்ய வேண்டுமா?

- ஆர்.சூரியகுமார், சென்னை - 82

தங்கள் பெண்ணுக்கு 2007ல் திருமணம் முடியும். சர்ப்பதோஷம் உள்ள வரனாகப் பார்க்கவும். பரிகாரம் தேவை இல்லை.

**கடகம்:** சுப காரியம் கைகூடும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. நண்பர், உறவினர்களால் ஆதாயம் இருக்கும். குழந்தைகள் வழியில் மகிழ்ச்சி ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**சிம்மம்:** முன்னேற்றமான வாரம். வீடு மாற்றம் உண்டாகும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். ஆரோக்கியம் சீராகும். செலவுகள் சுபமானதாக அமையும். வியாபாரத்தில் சற்று முற்போக்கான சூழ்நிலை உண்டாகும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வர நற்பலனை அளிக்கும்.

**கன்னி:** மனப் பிரம்மை தீரும். திருமண காரியம் கைகூடும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். உடன் பிறப்பால் அனுகூலம் ஏற்படும். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. மனமகிழ்ச்சி ஏற்படும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**துலாம்:** வர்த்தகத்துக்கு ஆதாயம் கிட்டும். திருமண காரியம் நடக்கும். வேலையில் நற்பெயர் ஏற்படும். வீடு/மனை வாங்க நல்ல காலம். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு/கேதுவுக்கு விளக்கு ஏற்றி வழிபடவும். ஆஞ்சநேயரை வழிபட்டு வருதல் நலம்.

**விருச்சிகம்:** அற்புதமான வாரம். வேலைப்பளு அதிகரிக்கும். கௌரவப் பதவி வந்து சேரும். கல்வியில் வளர்ச்சி உண்டாகும். வியாபாரத்தில் அபிவிருத்தி உண்டாகும். பணச் செல்வாக்கு பெருகும். ராகு/கேதுவுக்கு விளக்கு ஏற்றி வரவும். குரு பகவானை வழிபடுதல் நலம்.

**தனுசு:** எந்தக் காரியத்திலும் பொறுமையைக் கையாள்வது நற்பலனை அளிக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் உண்டாகும். செய்தொழிலில் சற்று முற்போக்கான சூழ்நிலை உண்டாகும். ஆஞ்சநேயரை வழிபடுதல் நலம் தரும்.

**மகரம்:** எதிலும் நிதானம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. குடும்ப வழியில் அனுசரணையுடன் நடந்துகொள்ளவும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர நற் பலன் உண்டாகும். வெள்ளி தோறும் அம்மன் தரிசனம் செய்து வரவும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**கும்பம்:** வேலையில் இடமாற்றம், உத்தியோக உயர்வு ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். திருமண நிகழ்ச்சிகள் கைகூடும். வராத நிலுவைகள் வசூலாகும். குடும்ப உறவில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வேலைப்பளு அதிகரிக்கும். கடன் தொல்லை குறையும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பலன் பெருகும்.

**மீனம்:** உற்சாகமான வாரம். மனச்சலனம் விலகும். சுப காரியம் கைகூடும். தொலைதூர அழைப்பு வந்து சேரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். தடைபட்டு வந்த திருமண காரியம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். வீடு/மனை வாங்க நல்லகாலம். எதிர்காலம் பிரகாசமாக இருக்கும். ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வர, நற்பலன் உண்டாகும். ○

# குளு குளு அனுபவங்கள்...



**ஒரு லட்ச ரூபாய் பரிசுப் போட்டியில், குளுகுளு அனுபவம் எழுதி ஆறுதல் பரிசாகத் தலா ஒரு கைக்கடிகாரம் பரிசாகப் பெறும் அனுபவங்கள்...**

### விபூதியும் அமெரிக்கப் பெண்ணும்...

**நா**னும் என் கணவரும் இரண்டு வருடங்களுக்கு முன் ஜெய்ப்பூருக்குச் சென்றிருந்தோம். ஓர் அமெரிக்கத் தம்பதியினர் நாங்கள் தங்கியிருந்த அறைக்குப் பக்கத்து அறையில் தங்கியிருந்தனர். எல்லோருமாக ஜெய்ப்பூர் சுற்றிப் பார்க்க கிளம்பினோம். எப்பொழுதும் நான் நெற்றியில் பொட்டுக்கு மேலே விபூதிக் கீற்று அணிவது வழக்கம். அமெரிக்கப் பெண்மணி என் நெற்றியிலிருந்த விபூதியைப் பார்த்துவிட்டு, 'Too much of face powder' என்று அழித்தார். பின்பு நான் அவருக்கு ஹிந்து மதத்தைப் பற்றியும், மதச் சின்னங்களைப் பற்றியும் விளக்கிய பிறகு புரிந்துகொண்டார். மறுநாளிலிருந்து அவர் என்னிடமிருந்து ஸ்டிக்கர் பொட்டு, குங்குமம், விபூதி எல்லாவற்றையும் கேட்டு வாங்கி நெற்றியில் இட்டுக்கொண்டார்.

**- தையு ராமமூர்த்தி, சென்னை**

### ஊசிக் கோபுர அசடு!

**நா**ன் ஒன்பதாம் வகுப்புப் படித்துக்கொண்டிருந்த சமயம். எங்கள் பள்ளியிலிருந்து திருவனந்தபுரத்துக்குச் சுற்றுலா சென்றோம். பல இடங்களையும் சுற்றிப் பார்த்துவிட்டுத் தனிப் பேருந்தில் பாளையங்கோட்டைக்கு வந்து, ஒரு பள்ளியில் தங்கினோம். காலையில் எழுந்து குளித்து சிற்றுண்டி முடித்தபின் அங்கே வசிக்கும் என் உறவினரின் வீட்டுக்குச் சென்று வரலாம் என்று எனது நண்பர் அபுபக்கரை அழைத்துக்கொண்டு புறப்பட்டேன். அதற்கு முன் அந்த ஊருக்குச் சென்றதே இல்லை.

முகவரியைக் காட்டி விசாரித்துக் கொண்டே உறவினர் வீட்டை அடைந்தோம். வரவேற்று உபசரித்தவர், அவர் பணியாற்றும் கல்லூரிக்கு அழைத்துச் சென்று சுற்றிக் காண்பித்தார்.

பகல் பன்னிரண்டு மணியளவில் நாங்கள் விடைபெற்றோம். வரும்போது பாதை மாறிவிட்டோம். சுற்றிச் சுற்றி அலைந்தும் நாங்கள் தங்கியிருந்த பள்ளி கண்ணில்படவில்லை. பதறிப் போனோம். தங்கியிருந்த பள்ளி ஊசிக் கோபுரம் அருகில் என்பது மட்டும் தெரியும்.

டவுன் பஸ்ஸில் ஏறி ஊசிக் கோபுரம் ஸ்டாப்பில் இறங்கி விடுவது என்ற முடிவுடன் ஒரு பஸ் நிறுத்தத்துக்கு வந்து




சேர்ந்தோம். அங்கு வந்த பேருந்தில் ஏறி ஊசிக் கோபுரத்துக்கு இரண்டு டிக்கெட் கேட்டேன். உடனே நடத்துனர், ''என்னய்யா விளையாடுகிறீர்களா? ஊசிக் கோபுரம் ஸ்டாப்பில் ஏறிக்கொண்டு ஊசிக் கோபுரத்துக்கே டிக்கெட் கேட்கிறீர்களே? இறங்குங்க...'' என்று திட்டி இறக்கி விட்டார். அசடு வழிந்தது.

- அ.சா.குருசாமி, செவல்குளம்

### உடைந்த துடுப்பு...

எங்கள் வகுப்பு மாணவ - மாணவியருடன் கொடைக்கானல் டூர் சென்றோம்.

கொடைக்கானல் ஏரியில் ஒவ்வொரு படகுக்கும் இரண்டு பேர் வீதம் ஏறி, ஏரியைச் சுற்றிப் பார்க்கப் பயணித்தோம். நானும் என் தோழியும் பயணித்த படகு, கைகளால் துடுப்புப் போட்டுப் பயணம் செய்யும் படகு. ஏரியில் வெகு தொலைவு சென்று விட்டோம். மாலை மறைந்து, இருட்டவும் தொடங்கிவிட்டது. எனவே படகுத் துறையை நோக்கி வேகமாகத் துடுப்பை இயக்கினோம். படாரென்று துடுப்பு உடைந்து கையில் வந்துவிட்டது எனக்கு! பிறகு படகு நகர்வது நின்றுவிட, எங்களுக்கு அந்த கொடைக்கானல் குளிரிலும் வியர்த்துக் கொட்டியது. எங்களை மற்றவர்கள் தேட ஆரம்பித்துவிட்டனர். பின்பு படகுத் துறையைச் சேர்ந்தவர்கள் வந்து மீட்டுச் சென்றார்கள்.

- ஜி.பாலசுப்ரமணியன், விருதுநகர்

### துபாய்க்கு பஸ்!

உறவினர்கள் எல்லாம் சேர்ந்து தனிப் பேருந்து மூலம் ஸ்ரீரங்கம், தஞ்சாவூர், கும்பகோணம் போன்ற புனித ஸ்தலங்களுக்குப் பயணம் சென்றோம். ஸ்ரீரங்கம் மற்றும் திருவானைக்கா, சமயபுரத்தில் தரிசனம் முடித்துக்கொண்டு தஞ்சைக்குப் புறப்பட்டோம். வழியில் வல்லம் அருகே பேருந்து பழுதடைந்துவிட்டது. டிரைவர் வண்டியைப் பழுது பார்க்கும் பணியில் ஈடுபட்டிருக்க, நாங்கள் தனித்தனி குழுக்களாக மரத்தடிகளில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். எங்கள் பக்கத்தில் பத்தாவது படித்துக் கொண்டிருக்கும் சுதா என்ற என் மாமாவின் பெண், மரத்தடியில் சாய்ந்தபடி கண்ணயர்ந்து கொண்டிருந்

# வெளிச்சமும் இருட்டும் கலந்த ஒளியில் பேரிரைச்சலுடன் சுமார் ஐம்பது அடி தொலைவில்.... அட்லாண்டிக் பெருங்கடல்!



தான். எங்கள் அத்தான் ''மூணு வருஷமா என் பையன் துபாய்ல இருக்கான். என்னை வா வான்னு கூப்பிடுறான்... என்னால போக முடியல'' என்று சொல்ல, நான், ''போயிட்டு வாங்களேன் அத்தான். சென்னையிலிருந்து நேரடியாகப் போனா துபாய்க்கு மூணு மணி நேரம்தான்'' என்று சொல்லிக் கொண்டிருந்தேன். திடீரென கண்விழித்த சுதா, அலங்க மலங்க எங்களையெல்லாம் பார்த்தாள். தூக்கக் கலக்கத்திலிருந்து சட்டெனக் கண் விழித்தவள் ''துபாய்க்கு பஸ் இருக்கான்னு பாருங்க மாமா. முதல்ல துபாய் போயிட்டு அப்புறமா தஞ்சாவூருக்குப் போகலாம்'' என்றாளே பார்க்கலாம். அந்த ஊரே அதிரும்படி கொல் சிரிப்பு!

**- சத்யா ஸ்ரீனிவாசன், சென்னை - 4**

இது அமெரிக்காவில் நடந்த நிகழ்வு. அன்று காலை தொலைபேசி அழைப்பு என்னை எழுப்பியது. மறுமுனையில் டெப்பி ஒன்டர்ஸன் - என் மகளின் அமெரிக்கத் தோழி. 'காலை எட்டு மணிக்கு ரெடியாகி இருங்கள். உங்களை நான் ஒரு இடத்துக்கு அழைத்துச் செல்கிறேன்' என்றாள். சரியாக எட்டு மணிக்கு டெப்பி வர, காரில் புறப்பட்டோம்.

சுமார் மூன்று மணி நேரப் பயணத்துக்குப் பிறகு, எங்கள் கார் பிரமாண்டமான ஓர் ஊருக்குள் சென்று கொண்டிருந்தது. பெயர் சார்லட்டீன். அங்கே பல் வேறு இடங்களைப் பார்த்து மகிழ்ந்தோம்.

எல்லாம் சுற்றிப் பார்த்து முடிந்த பிறகு, எனக்கு ஒதுக்கப்பட்ட அறைக்குக் கூட்டி வந்தார்கள். டெப்பி, 'அம்மா அறையின் பின் கதவைத் திறந்து வையுங்கள்' என்றாள். திறந்தேன். வியப்பில், மயக்கம் போடாத குறை! மாலை மறையும் வேளை... வெளிச்சமும் இருட்டும் கலந்த ஒளியில், பேரிரைச்சலுடன் சுமார் ஐம்பதடி தொலைவில் அட்லாண்டிக் பெருங்கடல்...! 'ஆஹா... அற்புதம்...' என்று வியந்து போனேன்.

அன்று இரவு ஓர் உணவு விடுதிக்குச் சென்றோம். மங்கிய மெழுகுவர்த்தி ஒளியில் அனைவரும் சாப்பிட்டோம். அப்போது டெப்பி, 'அம்மா! இந்த ஓட்டல் பழைமையானது. 'Gone with the Wind' நாவலை எழுதிய கதாசிரியை இங்குதான் அடிக்கடி வருவார்களாம்' என்று கூற, இன்ப அதிர்ச்சியில் எழுந்தேவிட்டேன்! அக்காலத்தில் நான் விரும்பிப் படித்த நாவலாசிரியை வருகை தந்த ஓட்டலில் நான்! டெப்பி கையைப் பிடித்து நன்றியுடன் குலுக்கினேன்.

**- டி.பிரபாவதி, கோயமுத்தூர்**

# அருள்வாக்கு

சமுத்திரத்தில் ஜலம் என்றென்றும் அளவு குறையாமலேதான் இருக்கிறது. அதிலிருந்து ஆவி பிரிந்து சென்று மழையாகி உலகத்தில் பல விதங்களில் நதி, ஓடை, வாய்க்கால், ஏரி, குளம், கிணறு என்று ஜலாசயங்களாக ஆகின்றன. சமுத்திரம் வற்றுவதில்லை. அதில் புதிதாக வெள்ளம் வருவதில்லை. அதிலிருந்து வந்த ஆறு, குளங்கள் வற்றலாம் அல்லது இவற்றில் வெள்ளம் வரலாம். வெயில் நாளானால் வீட்டுக் குழாயில் ஜலம் இல்லை; ரெட்ஹில்ஸில் ஜலம் இல்லை என்கிறோம். மழைக் காலத்தில் கோதாவரியில் வெள்ளம், காவிரியில் உடைப்பு என்று பேசுகிறோம். ஆனால், சிருஷ்டி காலத்தில் இந்த உலகத்தில் எத்தனை ஜலம் இருந்ததோ அதில் ஓர் இம்மிகூட - க்ரெயின் கூட - இன்றுவரை குறையவில்லை, கூடவும் இல்லை. பணக்காரர்கள் சிலர் நிலத்தை விற்று வீடு வாங்குவார்கள்; வீடுகளை விற்று பாங்கில் போடுவார்கள்; பாங்குப் பணத்தை 'ஷேர்'களாக மாற்றுவார்கள். மொத்த சொத்து மாறாது. அவற்றின் ரூபம் தான் பலவிதத்தில் மாறும். எல்லாவற்றையும் கூட்டினால் கணக்குச் சரியாக இருக்கும். அப்படியேதான் லோகத்தில் உள்ள மொத்த ஜலம் சமுத்திரத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மேகத்தில் இருக்க வேண்டும் அல்லாது போனால் மழையாக இருக்க வேண்டும் அல்லது நதியாக ஏரி, குளங்களாக இருக்க வேண்டும்.

பரமாத்மா பலவாகத் தோன்றியிருக்கிறார். தோன்றிய பின்னும் சமுத்திரம் மாதிரி கூடாமல், குறையாமல் இருக்கிறார். நமக்குக் கூடுதல், குறைவு எல்லாம் உண்டாகிறதாகத் தோன்றுகிறது. ஆனால், உள்ளது ஒன்றேதான் என்ற ஞானம் வந்தால் எங்குமே கூடுதலும் இல்லை; குறைவும் இல்லை

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# ஞானம் வந்தால்...

கடந்த 30 வாரங்களாக உங்களுடன் ஆயுர்வேதத்தின் தத்துவத்தைப் பற்றியும், நோய்களைப் பற்றியும், மருந்துகளைப் பற்றியும் எனக்குத் தெரிந்ததைப் பகிர்ந்து கொண்டேன். நீங்கள் எழுதிய பல கடிதங்கள் மூலம் இத் தொடருக்கு நீங்கள் காட்டி வந்த ஆர்வமும், ஆதரவும் வெளிப்பட்டன. 3000 ஆண்டுகளுக்கு மேலாக நமது நாட்டில் மக்களுக்குச் சேவை செய்துவரும் ஆயுர்வேதத்தில் உள்ள நல்ல விஷயங்களைப் பார்த்தோம். ஆனால், இந்த மருத்துவத்தில் சில குறைகளும் உள்ளன. சரியான மருந்துகள் கிடைக்காது போதல், சரியான மருத்துவர் கிடைக்காது போதல், பல மருத்துவர்களுக்கு நோயைப் பற்றியும், ஆயுர்வேத சாஸ்திரத்தைப் பற்றியும் ஆழ்ந்த அறிவு இல்லாமை, நவீன மருத்துவ விழிப்புணர்ச்சியில்லாமை.

# மருத்துவத்தின் தலையாய கடமை!



மேலும், நடைமுறையில் உள்ள காய்கறி போன்றவை ஆயுர்வேதத்தில் கூறப்படவில்லை. காலப்போக்கில் மாறியுள்ள உணவுப் பண்டங்களை திரிதோஷ சித்தாந்தப் படி நாமே வகுத்துக் கூற, திறமையும் பட்டறிவும் வேண்டும். இது மட்டுமில்லாமல் எங்கு பார்த்தாலும் பஞ்சகர்மா என்ற பெயரில் எல்லா நோய்களுக்கும் எண்ணெய்களைத் தேய்ப்பது ஆயுர்வேதத்துக்கு மிக்க அவப்பெயரையும், அதன் வளர்ச்சிக்குத் தடையையும் ஏற்படுத்தி வருகிறது. பஞ்சகர்மா என்பது வாந்தி எடுக்கச் செய்தல், மலத்தை வெளியேற்றுதல், கஷாயங்களைக் கொண்டும், எண்ணெய்களைக் கொண்டும் வஸ்தி செய்வித்தல், மூக்கின் வழியாக எண்ணெய் அல்லது மூலிகைச் சாறு போன்றவற்றைச் செலுத்தித் தலையில் இருக்கின்ற அழுக்குகளைச் சுத்தப்படுத்துதல் போன்றவையாகும். இவற்றை ஒரு சில படித்த மருத்துவர்களே சாஸ்திரத்தை விடாமல் செய்து வருகிறார்கள். ஆனால், பல இடங்களிலும் சாதாரணமாக எண்ணெய் தேய்த்துக் குளிப்பது என்பதையே ஏதோ ஒரு பெரிய சாதனை போல விளம்பரப்படுத்தி, அதையே எங்கு





டாக்டர் எல். மஹாதேவன்



மிகவும் தாழ்ந்துள்ளது. படித்து முடித்த வுடன் ஒரு நபர் கல்லூரியில் ஆசிரியராகி விடுகின்றார்! அனு பவமே இல்லாத அவர் எப்படிச் சொல்லிக் கொடுக்க முடியும்? இதைப் போன்ற பல பிரச்னை களை ஆயுர்வேதம் சந்தித்து வருகிறது. இருந்தாலும் பஞ்சபூத சித்தாந்தம், நவீன மருத்துவ விழிப்புணர்ச்சி, தானே மருந்து செய்தல் போன்றவற்றைக் கொண்ட மருத்துவரால் சிறந்த மருத் துவம் அளிக்க முடியும்.

சில நோய்களுக்கு நவீன மருத்துவமே சிறந்தது. உதா ரணமாக, ஒரு நபருக்கு மார டைப்பு வருகின்றது என்றால், இங்கு நாம் என்னதான் படித் திருந்தாலும் உடனே வசதி யுள்ள நவீன இருதய நோய் நிபுணரிடமே அந்த நோயாளியை அனுப்ப வேண்டும். இதைப் போல் மயக்க மருந்து கொண்டு செய்கின்ற சில அறுவை சிகிச்சைகள் போன்றவை நவீன மருத்துவத்திலேயே சிறந்து விளங்கு கின்றன. உடனடியாக வலியைக் குறைக் கின்ற மருந்துகள் ஆயுர்வேதத்தில் எனக்குத் தெரிந்து இல்லை; முன்பு இருந்ததாகவும் தெரியவில்லை.

இப்பொழுது நவீன மருத்துவத்தில் உள்ள நல்ல விஷயங்களை எடுத்துக் கொள்ளலாம். ஆயுர்வேதத்தில் எது நமக்கு முடியாதோ, அதை நவீன மருத்துவரிடம் அனுப்பிவிட வேண்டும். இதுவே மக்களுக் குச் செய்யும் தொண்டாகும். 'எல்லா நோய்களுக்கும் நாம் சிகிச்சை செய்து விடலாம்! நமது மருத்துவ முறையே சிறந்தது' என்று சொல்வது ஒரு வித மனநோய்தான்! 'நமது மருத்துவமும் சிறந்தது, மற்ற மருத்துவத்திலும் நல்ல விஷயங்கள் இருக்கின்றன. எனக்குத் தெரி யாத விஷயங்கள் எவ்வளவோ உள்ளன' என்ற அணுகுமுறையே சிறந்தது.

பார்த்தாலும் பஞ்சகர்மா என்ற பெயரில் செய்து வருகிறார்கள்!

ருமட்டாய்டு ஆர்த்தரைட்டிஸ் போன்ற பல நோய்களில், எண்ணெய் தேய்ப்பதால் வலி அதிகரிக்கிறதே அல்லாமல் குறைவ தில்லை. சென்னை போன்ற உஷ்ணமான பிரதேசங்களில் பிழி போன்றவற்றை அதிக மாகச் செய்ய முடியாது. இன்று கல்லூரி களில் படித்து வருகின்ற ஆயுர்வேத மருத்துவர்களுக்கு, போதிய அளவு நோயாளிகளைப் பார்க்கின்ற வாய்ப்புக் கிடைப்பதில்லை. கல்லூரிகளின் தரமோ

எல்லா மருத்துவ முறைகளுக்கும் சுகம் என்னும் ஆரோக்கியத்தை ஏற்படுத்துவதே தலையாய கடமையாகும். இவ்வாறு பல மருத்துவ முறைகள் மக்களைச் சென்றடைந்து, மக்கள் அனைவரும் திரிதோஷ சமநிலையைப் பெற்று, அக்னி பலம் பெற்று, மன - உடல் நலத்துடன் வாழ பகவான் ஸ்ரீ தன்வந்தரியைப் பிரார்த்திக்கிறேன். நன்றி.

**தன்வந்திரி டாலர் பரிசுப் போட்டி 16ல் பங்குபெற்று, பிரசவித்த தாய்மார்களுக் கான பத்திய உணவுக் குறிப்பை எழுதி தன்வந்திரி டாலர் பரிசு பெறும் வாசகி ஆர்.விஜயகுமாரி, மன்னார்குடி. அவரது குறிப்பு :**

தனியா, மிளகு, சீரகம், வேப்பம்பூ, சுக்கு, சுண்டைக்காய் வற்றல், பெருங்காயம், கறிவேப்பிலை, மிளகாய் - இரண்டு, மூன்று ஆகியவற்றை வறுத்துப் பொடி செய்து அன்னத்தோடு சேர்த்துச் சாப்பிட, பிள்ளை பெற்றபின் ஏற்படும் ஊளைச் சதை நீங்கி வயிற்றிலுள்ள கசடுகளும் நீங்கும்; உடல் புத்துணர்வு பெறும். பூண்டு போட்ட மிளகுக் குழம்பு செய்து சாப்பிடக் கொடுக்கலாம். மிளகுக் குழம்பு செய்முறை : மிளகு 2 டீஸ்பூன், சீரகம் 3/4 டீ ஸ்பூன், மிளகாய் வற்றல் 3, துவரம்பருப்பு 1 டீ ஸ்பூன் ஆகியவற்றை வெறும் வாணலியில் வறுத்து, பின் மிக்ஸியில் அரைத்து, புளி, உப்பு கரைத்த கரைசலில் விழுதைச் சேர்த்து, பூண்டு, வெங்காயம் வதக்கிப் போட்டுக் குழம்பைக் கெட்டியாகக் கொதிக்க வைக்கவும். 15 நாட்களுக்காவது இந்தக் குழம்பு சேர்க்கவும். இது தாய்ப்பாலைப் பெருக்கும். பெண்கள் இழந்த வலுவினை மீட்கும். தாய்ப்பால் அருந்தும் குழந்தைக்கு வயிற்றில் மந்தம், உப்புசம் ஏற்படாது. தாய், சேய் இருவருக்குமே நல்லது.

**இரண்டாவது பரிசாக டாக்டர் மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகம் புத்தகம் பெறும் வாசகி செல்லம்மாள் நாராயணன், சென்னை - 18. அவரது குறிப்பு :**

காரமில்லாத பொரித்த குழம்புக்கு உபயோகிக்கும் குழம்பு மிளகுப் பொடி. 50 கிராம் மிளகு, 100 கிராம் வெள்ளை உளுத்தம் பருப்பு, சுத்தம் செய்து நிழலில் உலர்த்திய கறிவேப்பிலை 1 கோப்பை. மிளகு, உளுத்தம் பருப்பை எண்ணெய் விடாமல் வாணலியில் சிவக்க வறுத்து கறிவேப் பிலையும் அதே சூட்டில் வறுக்க வேண்டும். ஆறிய பின் மின் அரைப் பானில் நன்றாகப் பொடி செய்து கொள்ளவும். பிஞ்சுக் காய்களாக, 50 கிராம் அவரை கத்திரி, சிறு புடல், 2 முருங்கை ஆகியவற்றைப் பொடியாக நறுக்கி, உப்பு, மஞ்சள் பொடி, சுண்டைக் காயளவு பெருங்காயம், 1 தேக்கரண்டி (மேற்படி தயாரித்த) குழம்பு மிளகுப் பொடி, 1/2 தேக்கரண்டி மஞ்சள் பொடி சேர்த்து நன்கு வேக வைத்து, 50 கிராம் பாசிப் பருப்பையும் குழைய வேக வைத்துச் சேர்க்கவும். 1 தே. கரண்டி நெய்யில் கடுகு, சீரகம், பச்சைக் கறி வேப்பிலை தாளித்து சேர்க்கவும்.

**(போட்டி முடிவுகள் தொடரும்)**

“சில நோய்களுக்கு நவீன மருத்துவமே சிறந்தது. நவீன மருத்துவத்தில் உள்ள நல்ல விஷயங்களை எடுத்துக்கொள்ள வேண்டும். ஆயுர்வேதத்தில் எது நமக்கு முடியாதோ, அதை நவீன மருத்துவரிடம் அனுப்பிவிட வேண்டும். இதுவே மக்களுக்குச் செய்யும் தொண்டாகும்.”



1 ● இரா.சக்கரபாணி, மதுரை - 7

? 'வண்ணத் தொலைக்காட்சிக் கொள்முதலில் தவறு இருந்தால் தூக்குமேடை ஏறத் தயார்' என்று முதல்வர் கூறியிருக்கிறாரே?



* புகழ் பாடும் புலவர்!

! கொள்முதலில் தவறு இல்லா விட்டாலும் விநியோகத்தில் இருக்கிறது என்பதை, அதிருப்தி அடைந்த மக்கள் நடத்தும் ஆர்ப்பாட்டங்கள் உணர்த்துகின்றனவே!

2 ● இரா.புவனேசுவரி, சென்னை - 81

? பதவிக்கு வந்தால் கையெழுத்துப் போட, தலைவர் விஜயகாந்துக்குத் தங்க பேனா தந்திருக்கிறார்களே தொண்டர்கள்?

! தங்க பேனாவை அவர் பயன்படுத்த வேண்டுமானால், பெரும்பான்மையான வாக்காளர்களின் உள்ளங்களில் தங்கள் தலைவர் 'தங்க' அவர்கள் ஏற்பாடு செய்யட்டும் - முதலில்.

# வாலி கவிதை பாடியது

3 ● பால.இராஜேந்திரன், அணைக்கரை

? பா.விஜய் நூல்கள் வெளியீட்டு விழாவில் கவிஞர் வாலி பேசுகையில், தலைமை தாங்கிய கலைஞரைப் பற்றி, 'இவர் தந்தார் மலிவு விலை அரிசி; இது போல் தந்ததுண்டா முன்பு இருந்த அரசி?' என்று கவிதை பாடியது நியாயமா?

!அரசுக் கட்டிலில் அமர்ந்திருப்போருக்குப் புகழாரம் சூட்டுவது மன்னர் கால பழக்கம். ஜனநாயகத்தில் அது தேவையில்லை. ஆனால், அதிகரித்து வருகிறது. கூடவே எதிர்கட்சியினரை மட்டம் தட்டுவதும் சேர்ந்து கொண்டிருக்கிறது!

4 ● ஆர்.ராஜா, குளித்தலை ❒

? சேது சமுத்திரத் திட்டத்தை எதிர்க்கும் ஜெ. குறித்து வைகோவும் விடுதலைப் புலிகளை ஆதரித்து அறிக்கை விட்ட வைகோவைக் குறித்து ஜெ.வும் இப்போது மௌனமாக இருப்பது சரியா?

! எதிர்த்தரப்பிலும்தான் ராமதாஸ் தீவிர மது விலக்குப் பிரசாரம் நடத்துகிறார். கருணாநிதியோ அந்நிய மது வகைகள் இறக்குமதிக்

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
ஆர்.ராஜா,
குளித்தலை -
639 104

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
பி.ராஜாமணி பெரியசாமி
சேலம் -
636 111

கும் பச்சைக்கொடி காட்டியுள்ளார். தோழமைக் கட்சி என்பதால் எல்லா விஷயங்களிலும் ஒருமித்த கருத்து இருக்கத் தேவையில்லை. மாற்றுக் கருத்தும் நிலவலாம். ஆனால், அதை வெளிப்படையாகக் கூற வேண்டும். மௌனம் சாதிப்பது தவறு.

5 ● **அவ்வை கே.சஞ்சீவி பாரதி, கலிங்கியம்**

? ***மாயாவதியின் வெற்றி மலைப்பாக இருக்கிறதே?***

! அதைவிடவும் மலைப்பு, வெற்றிக்குப் பிறகு அவர் கூறியுள்ள கருத்துகள். 'முற்பட்ட வகுப்பினரும் எனக்கு வோட்டுப் போட்டிருக்கிறார்கள். இது பகுஜன் சமாஜ் கட்சியில்லை; சர்வஜன சமாஜ் கட்சி' என்று கூறி பிராமணர்களையும் அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். அனைத்துத் தரப்பிலும் பொருளாதார ரீதியில் பிற்படுத்தப்பட்டோருக்கே இடஒதுக்கீடு செய்ய வேண்டும் என்ற கருத்தையும் வெளியிட்டிருக்கிறார். பழிவாங்கலின்றி, நேர்மையான ஆட்சி நடத்தினால் அவருடைய பழைய தவறுகளை மக்கள் மன்னிப்பார்கள்.

6 ● **லெ.நா.சிவகுமார், சென்னை - 33**

? ***ராமர் பாலத்தைப் பார்வையிடப் போவதாகக் கூறி சுப்பிரமணியம் சுவாமியின் மனைவி கடலுக்குள் படகுப் பயணம் மேற்கொண்டது பற்றி...?***

! அது வெறும் ஸ்டண்ட். பத்திரிகைகளில் பெயர் வர ஓர் உத்தி; அவ்வளவுதான். ராமர் பாலம், சுனாமி பேரழிவிலிருந்து ஒரு பாதுகாப்பு என்று கருதப்படுகிறது. அதை இடித்து, ஆத்திகர் மனத்தைப் புண்படுத்தாமலேயே சேது சமுத்திரத் திட்டத்தை அமல்படுத்த முடியும் என்பதுதான் சு.சுவாமி கட்சி, பி.ஜே.பி. ஆகியோரின் வாதம். இதை விஞ்ஞானபூர்வமாக ஆராய்வதை விட்டுவிட்டு, சரஸ்வதி மஹாலில் எதையோ தேடிக்கொண்டிருக்கிறார் டி.ஆர்.பாலு.

7 ● **எம். பாஸ்கர், திண்டுக்கல்**

? ***"பிழைதிருத்துவது என்பது சாதாரணப் பணி அல்ல. முதலில் புத்தகத்திலிருந்த பிழையைத் திருத்தினேன்; பிறகு நாட்டில் உள்ள பிழையைத் திருத்தினேன்; என்னைப் பற்றிச் சொல்கிறவர்களின் பிழையையும் திருத்தியவன் நான்" என்று கருணாநிதி கூறியுள்ளது பற்றி...?***

! தம்மிடமிருந்த பிழைகளைத் திருத்திக் கொண்டாரா? அது பற்றி ஒன்றும் சொல்லவில்லையே? பிழையாகவே வலம் வரும் சொந்தங்களைத் திருத்த முடிந்ததா? கூறவில்லையே!

8 ● **பி.ராஜாமணி பெரியசாமி, வாழப்பாடி**★

? ***உதவுகிற மனப்பான்மையை***

# நீங்கள் கேட்டவை

# நியாயமா?



✱ திருத்தாத பிழைகள்..?



✱ மௌன....



✱ ... மாறுபாடு

# தராசு

சூழ்நிலைதான் தீர்மானிக்கிறதா?

! ஊஹூம்! எந்தச் சூழ்நிலையிலும் உதவ நினைக்கும் மனம்தான் தீர்மானிக்கிறது.

9 ● மு.செந்தில்குமார், திருச்சி

*? கலைஞரின் சட்டமன்றப் பொன்விழாவில் எதிர்கட்சிகளும் பங்கு பெற்றிருந்தால் தமிழகத்தில் ஆரோக்கியமான, நாகரிக அரசியல் நடப்பதாக மற்ற மாநிலங்களுக்கு உணர்த்தியிருக் கலாமே?*

! நீங்க கேள்வியை உல்டா பண்ணிட்டீங்க, செந்தில்! 'தமிழ கத்தில் ஆரோக்கிய, நாகரிக அரசியல் சூழல் நிலவியிருந்ததால், கலைஞரின் சட்டமன்றப் பொன்விழாவில் எதிர்கட்சியினரும் பங்கு பெற்றிருப்பார்களல்லவா?' என்று உங்கள் கேள்வியை அமைத்திருக்க வேண் டும். அதற்கு, 'தமிழகத்தில் ஆரோக்கிய-நாகரிக அரசியல் சூழல் நிலவியிருந்தால், மதுரை நிகழ்வுக்குப் பிறகு கலைஞரின் பொன்விழாவே நடந்திருக்கக் கூடாது' என்று பதில் சொல்லியிருப்பேன்.

10 ● வனிதா தங்கம், கரூர்

*? சமீபத்திய தேர்தல்களில், தொடர்ந்து பின்னடைவைச் சந்தித்து வரும் காங்கிரசின் எதிர்காலம்?*

கூட்டணிச் சிறைக்குள் சிக்கியிருப்பது நிகழ் காலம். எதிர்காலமோ பரிதாபம் - அடி முதல் நுனி வரை உட்கட்சி ஜனநாயகம் மலர்ந் தாலொழிய.

11 ● மல்லிகா அன்பழகன்,
சென்னை - 112

*? முதல்வர் பொன்விழாவுக்காக 27 ஆயுள் கைதிகளுக்கு விடுதலை வழங்கியது பற்றி...?*

! முற்றிலும் தவறான, ஆபத்தான முன்னுதாரணம். இது வழக்க மாகி வருவது கண்டனத்துக்குரியது.

12 ● வே.நா.கதிர்வேல், வேலூர்

*? 'கண்ணகி மதுரையை எரித்ததை நாம் கண்டதில்லை. ஆனால், அழகிரி மதுரையை எரித்ததை இன்று தமிழ் மக்கள் அனைவரும் கண்கூடாகக் கண்டுள்ளனர்' என்று விஜயகாந்த் கூறியுள்ளது பற்றி...?*

! மிகத் தவறான ஒப்பீடு! முதலாவது தார்மிகக் கோபத்தினால் விளைந்த கொடூரம்; பின்னது சகியாமையினால் நிகழ்ந்த கோரத் தாண்டவம். முன்னது காவியம்; பின்னது வரலாற்று விபரீதம்!

13 ● என்.சண்முகம், திருவண்ணாமலை

*? சீனாவில் பெண்கள் மட்டுமே வாழும் ஒரு 'கன்னித் தீவு' நகரம் கட்டப்பட்டு வருவது பற்றி?*

! தனிமைப்படுத்திக் கொண்டு வாழ்வதில் அர்த்தமோ, அழகோ இல்லை; விபரீதங்களுக்கு வாய்ப்பு உண்டு. ○



✱ 'தங்க'த் தலைவர்!

## வாசக தராசுகளே!

எந்த பதில் சிறந்த பதில்? இவ்வார பதில்களுள் மிகச் சிறந்ததன் எண்ணைக் குறிப்பிட்டு, 'வாசக தராசு 27.05.07, கல்கி, சென்னை - 32' என்ற முகவரிக்கு (அஞ்சலட்டையில்) அனுப்புங்கள். அதிக வோட்டுகளைப் பெறும் பதிலைக் குறிப்பிட்டு அனுப் பும் வாசகர்களுள் ஒருவருக்குக் குலுக் கல் முறையில் ரூ. 100 பரிசு!

கல்கி 6.5.07 இதழில் வெளியான பதில்களுள் அதிக ஆதரவு பெறுவது கேள்வி எண்: 8. அதனைத் தேர்வு செய்து பரிசு பெறுபவர்: அ.பழநி, தெங்கம்புதூர். வாழ்த்துகள்!

✱ சர்வஜன வெற்றி!





# மங்களம் மாமி!

**வி**ஷ அம்புகளாகத் துளைத்தன வார்த்தைகள். பகல் தூக்கம் கெட்ட ஆத்திரத்தில் தகாத வார்த்தைகளை வேறு வாரி வழங்கினாள் அந்த அம்மாள்.

அவமானம் பிடுங்கித் தின்ன, அந்த நான்காவது மாடி ஃபிளாட்டிலிருந்து வெளியே வந்தாள் கனகம். நண்பகல் நேரம் என்பதால் வெளியே யாரும் இல்லை.

நடு வயதை அடைந்தும் வாழ்க்கையில் நிரந்தர வருமானம் இல்லாமல், வீடு வீடாகப் படியேறி சோப்புத் தூள், பாத்திரம் துலக்கும் பொடி விற்கும் அவலம்! அவளுடைய ஏழ்மைத் தோற்றத்தைக் கண்டு அனுதாபப்பட்டு வாங்கிக் கொள்வோரும் உண்டு... இதோ இந்த அம்மாள் மாதிரி அசிங்கப்படுத்தி அனுப்பும் ஆத்மாக்களும் உண்டு.

கண்ணீரைக் கட்டுப்படுத்தி, அவர்களின் மார்க்கெட்டிங் டீம் லீடர் சொல்லிக் கொடுத்ததை ஒரு நிமிடம் யோசித்தாள் கனகம்.

'எப்போதும் அடுக்குமாடிக் கட்டடங்களில் விற்பனை செய்யும்போது, மேல் தளத்திலிருந்து தொடங்கி, ஒவ்வொரு மாடியாக இறங்கி வந்து கஸ்டமர்களைப் பார்க்க வேண்டும்.'

அடுத்த கணமே கனகம் அதைச் செயல்படுத்திப் பார்த்தாள்...

''மேடம்... மேலே நான்காவது மாடி மங்களம் மாமிக்கு 'டெமோ' பண்ணிக் காட்டினேன். ரொம்பப் பிடிச்சுப் போயிடுச்சு. நாலு பாக்கெட் வாங்கிட்டாங்க...''

''யாரு மங்களமா? அவ யாரையும் நம்பாதவளாச்சே... அவ்வளவு சாமான்யமா எதையும் வாங்க மாட்டாளே... அவளே வாங்கிட்டாள்னா அப்ப கண்டிப்பா நல்ல ப்ராடக்ட்டாகத்தான் இருக்கும்... அவ ரெண்டு பாக்கெட்தானே வாங்கினா? எனக்கு மூணு பாக்கெட் கொடு...''

மூன்றாவது மாடி... அப்புறம் இரண்டாவது... கடைசியில் எல்லா சரக்குமே விற்றுத் தீர்ந்துவிட்டது. ●

பாரதி கிஷோர்

இப்போதும்கூட அபார்ஷன் என்றால் 'அட ராமா' என்று காதைப் பொத்திக் கொள்பவர்கள் இங்கே அதிகம் உண்டு. அமெரிக்காவில் அபார்ஷன் என்றால் 'ஓ... அப்படியா' என்று அசுவாரஸ்யமாகக் கேட்பார்கள். வெனிசுலாவில் தேர்தல் என்றால் நாம் எப்படிக் கேட்போமோ அப்படி. ஆனால், இந்த நிமிடம் அமெரிக்காவில் அபார்ஷன்தான் சர்ச்சை. காரசாரமாக விவாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அபார்ஷன் செய்துகொள்வது ஒரு பெண்ணின் உரிமை என்பதை அவர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். 'இப்போது குழந்தை வேண்டாம் என்று சொல்கிறாயா... சரி, அதற்கு உனக்கு உரிமை உண்டு.' இது முதல் வகை அபார்ஷன். இதற்கு எந்த எதிர்ப்பும் இல்லை. ஆனால் 'இந்தக் குழந்தை வேண்டாம்' என்று ஒரு தாய் சொல்லலாமா? இதுதான் சர்ச்சைக்குரிய கேள்வி!

இப்படிப் பாருங்கள். ஸ்கேன் செய்கிறார்கள். குழந்தைக்குப் பிறவிக் குறைபாடுகள் இருப்பது தெரிய வருகிறது. மருத்துவர்கள் அதைத் தாயாரிடம் சொல்லிவிடுகிறார்கள். 'பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கு கேன்ஸர் இருக்கிறது அல்லது மூளைச் சிதைவு அல்லது வேறு ஏதோ' அந்தத் தாய் என்ன செய்ய வேண்டும்? தன் குழந்தையை அபார்ட் செய்யலாமா, கூடாதா?

செய்யலாம் என்கிறது ஒரு பிரிவு. 'தீர்க்கப்பட முடியாத குறைபாடுகளுடன் ஒரு குழந்தை பிறக்கத்தான் வேண்டுமா? நமக்கும் துன்பம்; அந்தக் குழந்தைக்கும் துன்பம். தெரியாத உயிர், நம் கண் முன்னால் சித்தரவதை அனுபவிப்பதைக் காட்டிலும் பிறக்காமல் இருப்பதே உத்தமம்.' மிகுந்த மனவேதனையுடன் எடுக்கப்படும் முடிவு இது.



சட்டப்படி இது சாத்தியமே. இப்படிச் செய்யலாமா என்று சர்வே எடுத்தபோது எழுபது சதவிகிதத்தினருக்கும் மேல் சரியே என்று வாக்களித்தனர். அபார்ஷன்தான் ஒரே வழி என்றும் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

அபார்ஷனுக்கு எதிரானவர்களின் வாதமோ இப்படி இருக்கிறது... 'அந்தக் குழந்தை என்ன பாவம் செய்தது? வேண்டாம் என்று மறுக்கும் உரிமையை ஒரு பெண்ணுக்கோ அல்லது அவர் கணவருக்கோ, குடும்பத்தினருக்கோ யார்

வழங்கியது? குழந்தை பிறந்த பிறகு இப்படி ஒரு குறைபாடு தோன்றியிருந்தால் என்ன செய்திருப்பார்கள்? குழந்தைகள் குறைபாடுகளுடன் பிறந்தால் அவர்களை கவனித்துக் கொள்வதுதானே நம் வேலை?'

இவர்களை பழைமைவாதிகள் என்கிறார்கள் அபார்ஷனுக்கு ஆதரவு தெரிவிப்பவர்கள். டவுன்ஸ் சிண்ட்ரோம் என்று ஒரு குறைபாடு. கூடுதல் குரோமோஸோம் இருப்பதால் ஏற்படும் குறைபாடு. இந்தக் குறைபாட்டுடன் பிறக்கும் குழந்தைகளுக்கு வளர்ச்சியில், தோற்றத்தில், புத்திசாலித்தனத்தில் நிறைய குளறுபடிகள்



# உயிரோடு உயிராக...

இருக்கும். ஸ்கேனிங் செய்யும்போதே இதைக் கண்டுபிடித்துவிட முடியும். அவ்வாறு செய்தபோது 90% பெற்றோர் அபார்ஷனைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

சரி, என்னதான் தீர்வு? ஸ்கேனிங்கே வேண்டாம் என்று சொல்லிவிடவும் முடியாது. காரணம், பல்வேறு மரபியல் கோளாறுகளை, குழந்தை பிறப்பதற்கு முன்பே சரி செய்துவிட உதவுவது ஸ்கேனிங்தான். மருத்துவர்களே சொல்லட்டும் என்றார்கள் சிலர். ஆனால், அவர்கள் கைகளை மேலே தூக்கிச் சரணடைந்துவிட்டார்கள். 'எந்தெந்தக் குறைபாடுகள் இருந்தால் அபார்ஷன் செய்யலாம் என்று எங்களால் சொல்ல முடியாது. முடிவெடுக்க வேண்டியது பெற்றோர்தான். குறிப்பாகத் தாயார். இதில் நாங்கள் முடிவு செய்வதற்கு ஒன்றுமில்லை.'

அமெரிக்க அரசியலில் அபார்ஷன் ஒரு முக்கிய அம்சம். ஆதரித்தும் எதிர்த்தும் தேர்தல் சமயத்தில் நிறைய அரசியல்வாதிகள் நிறைய பேசுவார்கள். மற்ற விஷயங்களைப் போலவே தானைத் தலைவர் புஷ்ஷுக்கு அபார்ஷன் குறித்த தெளிவான நிலைப்பாடு எதுவும் கிடையாது. 'என்னைக் கேட்டால் அபார்ஷன் தவறு. ஆனால், அதற்காக அபார்ஷனை எதிர்க்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. அதே சமயம், அபார்ஷனுக்காக அமெரிக்க அரசாங்கம் செலவு செய்யாது. ஆனால், சில சமயங்களில் அதைத் தவிர்க்க முடியாது. ஆனால், அதற்காக அதை நியாயப்படுத்த முடியாது. அதே சமயம்...''

தெரியாது என்று ஒற்றை வார்த்தையில் சொல்லியிருக்கலாம். ஆனால், ஓர் அதிபர் அப்படிச் சொல்ல முடியாது அல்லவா?

● மருதன்

# பேய் வீடு



**சீர்காழியிலிருந்து வேகமாய் வந்த அந்தப் பேருந்து, மதுரைக்கு முன்பு இருக்கிற அந்தப் புறநகர் பகுதி கிராமத்து பஸ் ஸ்டாண்டில் நிற்க, நெரிசல் தந்த நசநசப்பில் வியர்க்க விறுவிறுக்க இறங்கினான் சங்கரன்.**

தன்னுடன் பணியாற்றுகிற குணசேகரன் தந்திருந்த, கல்லூரி மாணவனான அவனது தம்பி அருணின் செல்ஃபோனுக்குத் தொடர்பு கொண்டான்.

''ஹலோ அருணா? நான் ஒங்க அண்ணனோட ஃப்ரண்ட் சங்கர் பேசறேன்'' என்று பேசத் துவங்கியவன், தான் சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்குள்,

''ஓ... நீங்களா? காலையிலதான் எங் கண்ணன் ஃபோன் பண்ணி நீங்க வர்றதாச் சொல்லிச்சு. பஸ் ஸ்டாண்டிலேயே நில்லுங்க. கொஞ்ச நேரத்துல வந்து ஒங்களக் கூட்டிக்கிட்டுப் போறோம்'' என்றான் அருண்.

சங்கரன், தனது சட்டையின் நிறத்தையும், கையில் சூட்கேஸ் வைத்திருப்பதையும் அடையாளமாகக் கூறினான்.

சீர்காழியைச் சொந்த ஊராகக் கொண்ட சங்கர், இந்த ஊருக்கு வருவது இதுவே முதல் தடவை. சாலையில் போவோர் வருவோரைக் கண்களால் மேய்ந்தவாறு நின்றிருந்தவன், சற்றைக்கெல்லாம் ''நீங்க தானே சங்கர்ங்கறது?'' என்று தனக்குப் பின்னாலிருந்து வந்த குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

''சார்... நான்தான் அருண். உங்ககூட வேல பார்க்குற குணசேகரனோட தம்பி'' என்றவன், தன் அருகில் நின்றிருந்த சக வயதுடைய நான்கைந்து இளைஞர்களைச் சுட்டிக் காட்டி ''இவங்களும் எங்கூடத்தான் தங்கியிருக்காங்க. சரி,வாங்க வீட்டுக்குப் போவோம்'' என்று கூறி, நண்பர்கள் புடை சூழ அழைத்துப் போனான்.

ஊரிலுள்ள இரண்டு நீளமான தெருக்களைக் கடந்து சென்ற பிறகும் இன்னும் அவர்கள் தங்கியுள்ள வீடு வந்த பாடில்லை.

''சீர்காழியிலேர்ந்து மதுரைக்கு டிரான்ஸ்ஃபராகி வந்துட்டீங்களா?'' - மௌனத்தைக் கலைத்தான் அருண்.

''ஆமா தம்பி'' என்றான் சங்கரன்.

''எங்ககூட எவ்ளோ நாள் தங்கப் போறீங்க?''



''சிட்டியில நான் வேலை பாக்கப் போற ஆபீஸுக்குப் பக்கத்துலேயே ரூம் கெடைக்கிற வரைக்கும்''

ஒருவழியாக அருணும் அவனது நண்பர்களும் தங்கியுள்ள அந்த வீட்டை அடைந்தனர்.

பங்களா என்று சொல்ல முடியாமலும், சாதாரண வீடுதான் என்று எடை போட்டு விட முடியாமலும் அந்த இடத்தின் தோற்றம் இருந்தது.

வீடு பூராவும் மொசைக் தளம். உள்ளுக்குள் பெரிய ஹால். பக்கவாட்டில் பாத்ரூம், கிச்சன் ரூம், பெட்ரூம் என நான்கைந்து ரூம்கள் இருந்தன. இவற்றில் பாத்ரூமும் கிச்சன் ரூமும் மேல் தட்டு மக்களின் வீட்டு நாகரிகத் தன்மையில் நவீனமாக உருவாக்கப்பட்டிருந்தன. முற்றத்தில் சிலந்தி வலைகள் மலிந்து இடந்தன.

''இந்த வீட்டப் பத்தி எங்கண்ணன் ஏதாச்சும் சொல்லிச்சா சார்?'' என்றான் அருண்.

''ஆமா, இந்த வீட்ல ஏதோ ஆவிங்க உலவிக்கிட்டிருக்குறதாச் சொன்னான்!'' என்றான் சங்கரன்.

''ஆவிகள் பத்தி ஒங்களுக்கு நம்பிக்கை இருக்குதுங்களா?'' - இன்னொருவன் கேட்டான்.

''கண்ணால பாக்காத ஒன்ன, இருக்குறதா எப்படி நம்ப முடியும்?''

''இருக்குதுங்க சார். நெசமாவே ஆவி இருக்குது. இந்த வீட்ல குடியிருந்த வீட்டுக்குச் சொந்தக்காரரோட பொண்ணு, பல வருஷங்களுக்கு முன்னால பிரசவக் கோளாறால செத்துப் போயிருச்சாம். புள்ள செத்த ஏக்கத்துல ஊர்லருந்து வந்திருந்த அவங்கம்மாவும் மறுநாளே வெஷத்தக் குடிச்சுச் செத்துப் போயிருச்சாம். அப்போயிருந்து அவுங்க ரெண்டு பேரோட ஆவிங்

**அல்லிநகரம் தாமோதரன்**

களும் இந்த வீட்ல நடமாடிக்கிட்டிருக்குது. ஆவி நடமாட்டத்த தெனமும் நடுராத்திரியில பாத்துப் பயந்து எங்களுக்குப் பழகிப் போயிருச்சு. ஆனா, புதுசா இங்க யாரு தங்க வந்தாலும் அந்த ஆவிங்க ஒருநாள் கூட இருக்க விடாதுங்க. வேலையக் காட்டி வெரட்டியடிச்சிடும். நீங்க ராத்திரி தூங்கையில ஏதாச்சும் வித்தியாசமா அலறல் சத்தம் வந்தா பயந்துட வேணாம். போகப் போகப் பழகிப் போய்ரும்'' என்றான் அருண்.




அன்று இரவு பதினோரு மணிக்கு மேலாகியும் உறக்கம் வந்திராமல் ஒருவிதத் திகிலுடன் அங்கிட்டும் இங்கிட்டுமாகப் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்த சங்கரன், ஒரு மாற்றத்தை விரும்பியும், மன இறுக்கத்தைத் தளர்த்துவதற்காகவும் சட்டெனப் படுக்கையை விட்டெழுந்து வீட்டின் கதவைத் திறந்து வாசலில் வந்து நின்றான்.

அடுத்த நொடியே ''என்னப்பா தம்பீ... புதுசா வந்திருக்கியா?'' என்று குரல் கொடுத்தபடி அறுபது வயசு மதிக்கத்தக்க ஒரு நபர் அவனுக்கு அருகில் வந்து நின்றார்.

''ஆமாங்க. கொஞ்ச நாள் இங்கதான் தங்கறதாயிருக்கேன்'' என்றான் சங்கரன்.

''அது சரி... அந்த வீட்ல தங்கியிருக்கற வெடலப் பயல்க ஏதேதோ பேய்க் கதையச் சொல்லி மொத நாளே உங்க தூக்கத்தக் கெடுத்துட்டானுங்களா?''

அந்த ஆள் அவ்வளவு சரியாகச் சொன்னது கண்டு சங்கரனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''அவங்க சொல்றதெல்லாம் நெசமாவா ஐயா?'' சிநேகமாய்க் கேட்டான்.

அவ்வளவுதான்...! அந்த ஆள் நக்கலாக 'க்ளுக்' கிட்டுச் சிரித்தார்.

''அட, நீ ஒண்ணு! இந்த வூட்டுக்காரனோட பொஞ்சாதி பெரசவ வலியில ஜன்னி கண்டு செத்துப் போனது நெசந்தான். பொஞ்சாதி செத்துப் போகவும், இந்த வூட்டுக்காரரு மெட்ராசுக்குப் போயி அவுங்க அண்ணன் வீட்ல செட்டிலாயிட்டாரு. போன வருஷம் அவரு இங்க வந்திருந்தப்ப, 'வீடு சும்மாத்தானே இருக்குது... நாங்க தங்கிக்கிறோம்'னு இந்த காலேசுப் பயங்க அவருகிட்ட கேட்டாங்க. சரி.. வீட்டுக்கும் ஒரு பாதுகாப்பா இருக்கும்னுட்டு அவரும் இவனுங்களத் தங்கிக்கச் சொல்லிட்டுப் போயிட்டாரு. இங்க தங்கியிருக்குறவனுங்க எல்லாரும் கூலிக்கார வூட்டுப் புள்ளைங்க போல இருக்குது. வேற எங்காச்சும் வூடு எடுத்துத் தங்கினா ஆயிரக்கணக்குல வாடகை கேப்பாய்ங்க. நம்பளால தர முடியாதுன்னுட்டு இந்த வீட்ட யாராச்சும் வாடகைக்கோ, வெலைக்கோ கேட்டுப் பாக்க வந்தா, அவுங்ககிட்ட இந்த வூட்ல பேயி பிசாசு நடமாடுதுன்னு புரளியக் கௌப்பி வுட்ருவானுங்க.

இதனாலேயே இப்போல்லாம் யாரும் இந்த வீட்ட வாடகைக்கோ, வெலைக்கோ கேட்டு வர்றதேயில்ல. வாடகைக்கு வீடு எடுத்துத் தங்கக்கூட வசதியில்லாமெ, அரையுங் குறையுமா வயித்துப் பசியத் தீத்துக்கிட்டு. ஊரான் வூட்ல எலவசமாத் தங்கிப் படிக்கிற இந்தப் பயல்களுக்கு, டாக்டராகணும், எஞ்சினியராகணும்னுட்டு கனவு மட்டும் மலை ஒசரத்துல இருக்குது'' என்று சொல்லி முடித்தார் அந்த நபர்.

விசை மொத்தமும் உபயோகித்து, கசக்கிப் பிழிவது போல மருகியது சங்கரனின் மனசு. 'பாவம்... வளர வேண்டிய பையன்கள். இவங்க கனவைக் கலைச்சிடக் கூடாது!' என்ற முடிவுக்கு வந்தவன், வீட்டுக்குள் போய் ஹாலிலிருந்த தனது சூட்கேஸை எடுத்துக்கொண்டு வேகமாய் பஸ் ஸ்டாண்டு நோக்கி நடந்தான். ○

எம்.அசோக் ராஜா

''டாக்டர், எதைப் பார்த்தாலும் எனக்கு ரெண்டு ரெண்டாத் தெரியுது.''

''சரி... சரி... ரெண்டு பேரும் முதல்ல உட்காருங்க!''





கே.ஜி.எஸ்.

''கொள்ளையர்கள் பற்றித் தகவல் கொடுக்கறவங்களுக்குத் தக்க சன்மானம் வழங்கப்படும்னு சொல்றீங்களே... என்ன கொடுப்பீங்க ஏட்டையா!?''

''மாமூல்ல பாதி!''

குட்டி பிரசன்னா

''உங்க கதையை காப்பியடிச்சு இன்னொருத்தன் எழுதியிருக்கானே..! கோபம் வரலையா?''

''அந்தக் கதையோட ஒரிஜினல் படைப்பாளிக்கு வர்றதைவிட எனக்குக் கம்மியாத்தான் வரும்!''





தஞ்சை தாமு

''மிஸ்டு கால் வந்தா எனக்கு எரிச்சலாக இருக்கும்... உனக்கு?''

''மிஸஸ்கிட்டேர்ந்து கால் வந்தா...!''

புதுமுகம் சந்தோஷ், பழைய முகம் அங்கீதா கூட்டணியில் மலர்ந்திருக்குற ஒரு டைப்பான படம் திரு.ரங்கா. பொண்ணோட கல்யாணத்துக்குப் பணமில்லாம தவிக்கிறார் சந்தோஷ் அப்பா. குடும்பம் மொத்தமும் எங்கெங்கோ பீராய, ரெண்டாவது பொண்ணு பாசத்தோட உச்சத்துல விபரீதமா ஒரு முடிவெடுக்குறா. வாடகைத் தாயாகி அக்கா கல்யாணத்துக்குப் பணம் வாங்க, உண்மை தெரிஞ்ச குடும்பம் துடிச்சிப் போகுது. அவமானமாயிடுமோன்னு மொத்த பேரும் விஷம் குடிச்சு செத்துப்போக, அதிர்ஷ்டவசமா சந்தோஷ் மட்டும் காப்பாத்தப்படறார். பணமில்லாத நிலைய நொந்துக்கிட்டு, அந்தப் பாழாய்ப்போன பணத்தை நோக்கிப் பயணப்படறார்.

இன்னொரு பக்கம், அனாதை இல்லத்துல வளர்ற அங்கீதாவ, வளர்ப்பு மகளா தத்தெடுக்கிற ஒரு குடும்பம் வளர்த்து, ஹீரோயினாக்கிப் பணம் சம்பாதிக்கத் துடிக்குது. மிரட்டலுக்குப் பயந்து நடிகையாகுற அங்கீதா, பணத்தையே வெறுக்குறாங்க. பணத்தைத் தேடுற சந்தோஷும் வெறுக்குற அங்கீதாவும் ஒரு புள்ளியில சந்திக்குறாங்க. என்ன நடக்குதுங்கறதுதான் க்ளைமேக்ஸ்.

ஃப்ளாஷ்பேக் காட்சிகள் படத்தை உயிர்ப்போட நகர்த்துது. மணிவண்ணன், குமிலி, நிழல்கள் ரவி, நந்திதா, சந்தோஷ், அங்கீதான்னு எல்லாரும் நிறைவாவே செஞ்சிருக்காங்க. அங்கீதா உடம்பைக் கவனிக்கறது நல்லது. ரொம்ப குண்டா தெரியறார். வில்லனா வர்ற நாசரும், ஜெ.பி.யும் கொளுத்தறாங்க. வி.எம்.சி.ஹனீபா காமெடி எடுபடுது. சுனில் ஷெட்டி, பாவம்!

அடர்ந்த காட்டுக்குள்ள கேமரா கோணங்கள் அற்புதம். விசாகனோட ஒளிப்பதிவு ஓகே. இசை ஸ்ரீகாந்த் தேவா. ரெண்டு பாடல்கள் தேறுது.

சிட்டியை விட்டு காட்டுக்குள்ள நுழைஞ்சதும் திரைக்கதை டல்லாயிடுது. அதுவரைக்கும் இருந்த வேகம் அப்பீட் ஆகி, சோர்வு வந்து தொத்திக்குது. நண்பர்களா வர்றவங்களோட சேஷ்டை தாங்க முடியலை.

ஐம்பது சதவிகித வெற்றியை அழகா எட்டிப் பிடிச்ச டைரக்டர் பார்கவன், மீதிக்குப் போராட வேண்டியிருக்கு.

# திரு. ரங்கா





# கருப்பசாமி குத்தகைதாரர்

'படிக்குற வயசுல காதலிக்கக் கூடாது. ஆனா, படிக்குற வயசுலதான் காதல் வரும்... என்ன செய்யறது?'- இதுதான் பாலஸ் கருப்பசாமி குத்தகைதாரரோட ஒன் லைன்.

மதுரை டவுன்ல சைக்கிள் ஸ்டாண்டை குத்தகை எடுத்து நடத்துற கரண், அங்க தினமும் சைக்கிள் நிறுத்த வர்ற காலேஜ் பொண்ணு மீனாட்சியோட காதல் மனசை யும் குத்தகை எடுத்துடறாரு. அப்புறம் என்ன? சைக்கிள் கேப்புல ரெண்டு பேருக் குள்ளேயும் ஏரோப்ளேன் ஸ்பீடுல காதல் பறக்குது. அதே நேரத்துல மீனாட்சி நல் லாப் படிக்கணும்னும் கரணோட மனசு துடிக்குது. வழக்கம் போல காதலுக்கு எதிர்ப்பு, பிரச்னைகள்னு வந்து, ரெண்டு பேரும் எப்படி ஒண்ணு கூடுறாங்கன்னு நேர்த்தியான திரைக்கதையோட சொல்லி யிருக்காங்க.

ஆ... ஊ....ன்னு பொங்கி எழுந்து, தாம் தூம்னு ஓவர் டயலாக் விட்டு எகிறிக் குதிக்கற ஹீரோங்க மத்தியில நிதானம் + பொறுமையோடு ரொம்ப கேஷுவலா நடிச்சி கொக்கிபோட்டு நம்ம மனசை அள்றாரு கரண். அதே மாதிரிதான் அறிமுக நாயகி மீனாட்சியும். மதுர மல்லிய சுமந்து வாசனையை மட்டும் நம்மகிட்டயே நிரந்தரமா தங்க வெச்சிடுறாங்க (என் னம்மா, பாலா படத்துல கூப்பிடுறாங் களாமே..?)

வடிவேலுவால மட்டும் எப்படி இப்படி ஸ்க்ரீன்ல வந்தாலே சிரிக்க வைக்க முடியுது? மனுஷன் சிரிப்பால ரசிகனுங்கள பிரிச்சு மேயறார். தினாவோட இசையில பாடல்கள் எல்லாமே ரவுசு டோய். மதுரை வீதிகள மரியாதை குன்றாம காண்பிச்சு கேமரா வித்தை காட்டியிருக்கார் ஜே. ஸ்ரீதர்.

மண்ணின் மைந்தர்களா ரத்தமும் சதையுமா மனிதர்களை உலவவிட்டு முதல் படத்துலயே அண்ணாந்து பார்க்க வச்சிருக் காரு டைரக்டர் மூர்த்தி. தேர்ந்தெடுத்து படம் ஒப்புக்குற கரணுக்கும் இந்தப் படம் மைல்கல். தொடர்ந்து இதையே ஃபாலோ பண்ணுங்கப்பு!

- லஜ்ஜாவதி

# உங்கள் ஊரில் கல்கி

## அன்பு வாசகர்களே!

மிஸ் பண்ணிடாதீங்க!

கல்கி நிறுவனத்திலிருந்து மதிப்புமிக்க வாசகர்களாகிய உங்களைச் சந்திக்க உங்கள் ஊருக்கே வருகிறது கல்கி ஆசிரியர் குழு. இந்தச் சந்திப்பில் நீங்கள் உங்கள் குடும்பத்தோடு அவசியம் கலந்துகொண்டு, 'கல்கி' வார இதழைப் பற்றிய உங்களுடைய மேலான யோசனைகளையும் கருத்துகளையும் பரிமாறி, ஆக்கபூர்வமான யோசனைகளின் மூலம் கல்கி இதழை மேலும் மிளிரச் செய்ய உதவ வேண்டுகிறோம்.

இதயத்தை இதமாக்கும் 'கலகல' நிகழ்ச்சிகளும், இன்ப அதிர்ச்சியூட்டும் பரிசுப் போட்டிகளும் உண்டு.

அவசியம் கலந்துப்பீங்கதானே!

- ஆசிரியர் குழு

**சனிக்கிழமை - 19.5.07**

**புதுச்சேரி**

இடம் :

அன்னை வரவேற்பு இல்லம்,
54, நடுத்தெரு, புதுச்சாரம்

நேரம் :

மாலை 4.30 மணி




**ஞாயிற்றுக்கிழமை**

**20.5.07**

**விழுப்புரம்**

இடம் :

ஹோட்டல்
உட்லேண்ட்ஸ்,
திருச்சி மெயின் ரோடு
(சிக்னல் அருகில்)

நேரம் :

மாலை 4.30 மணி

**விரைவில் மற்ற ஊர்களிலும்...!**



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...




27.5.2007

இணைப்பு

**உள்ளே...**



பசுமையான நுழைவாயில்...

மாணவரின் தலைமேலே
வெற்றி குல்லா!

எம்.எஸ்.ஷாவின்...
அந்த 7 - ல் தொடங்கி...

சூப்பர் ஜாபில்...
கடலில் கலக்கலாம்
ஆகாயத்தில் அசத்தலாம்!







கலை நுணுக்கத்தில்...
யுவர் அட்டென்ஷன் லேடீஸ்!

இன்னும்... இன்னும்...





## நுழைவாயில்...

எங்கும் பசுமை! பரந்த பச்சைப் புல்வெளி அதனுள்ளே பசுமைக் குன்றுகள்; பசுமைச் சரிவுகள்! விளிம்புகளில் அழகிய சிறு மரங்கள், பசுமைக் குடை சூடிய செடிகள், நீர்ச் சுனைகள், பெரும் வட்டங்களில் அழகிய மின் விளக்குகள், புன்னை, வேம்பு என குளிர் தரும் மரங்கள், அழகிய பூக்களை தினமும் அவதரிக்கும் பூச்செடிகள்... இவைகளைத் தொட்டு விளையாடி மெல்லப் படரும் இளந்தென்றல்... பிருந்தாவனம் ஒன்றில் நுழைந்து விட்டோமா என்கிற உணர்வு நமக்குள் கிளர்ந்தெழும் போது, எதிரே தெரிந்த கட்டடங்கள் மட்டுமே ஒரு கல்லூரிக்குள் வந்திருக்கிறோம் என்கிற இயல்பைத் தெரிவித்தன!

ஒரு இலட்சம் சதுர அடியில் தரை. முதல் - இரண்டு என மொத்தம் மூன்று தளங்களில் செயல்பட்டு வருகிறது கேட்டரிங் காலேஜ். அகலமான சன்னல்கள், ஆங்காங்கு மின் விசிறிகள், அழகிய மர வேலைப்பாடுகளுடனான மேஜை மற்றும் மர பெஞ்சுகள், அமைதிச் சூழலில் ரம்மியமாகத் திகழும் வகுப்பறைகள், நட்சத்திர உணவு விடுதிகளில் அமையப்பெற்றிருப்பது போல, வனப்பு மிகு வரவேற்பு அரங்கு. பிராக்டிகலாகப் பயிற்சி பெற,மிகவும் தூய்மையான அதி நவீன சமையற்கூடங்கள்,

# பிருந்தாவனக்







சகல வசதிகள் மற்றும் தர நிர்ணயங்களுடனான CATERING LAB எனப்படும் சமையல் பரிசோதனைக் கூடங்கள் என எல்லாமே வெகு கச்சிதமாக காட்சியளிக்கின்றன.

ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் இருப்பது போன்ற உணர்வைத் தருகிறது, அன்னை பாத்திமா கேட்டரிங் காலேஜ் ரெஸ்டாரென்ட். மெலிதாகப் படர்ந்திருக்கும் மென்மையான ஒளிச் சிதறல்கள், வெல்வெட் விரிப்புகள், வெல்வெட் குஷன் சாய்வு நாற்கலிகள், பீங்கான் குடுவைகள், தட்டுகள், வண்ணப் பூக்களை வரிந்துக் கொண்ட கண்ணாடி தம்ளர்கள், மேனியை வருடும் குளிரூட்டப்பட்ட உணர்வுகள்!

இவைகளைக் கடந்தால் வருவது அவசியமானதொரு, அருமையான நூலகம். சுமார் நானூறு பேர் தங்கிப் பயின்று, வசித்திடும் அளவுக்கு வடிவமைக்கப்பட்ட ஹாஸ்டல் வசதி, விளையாட்டு மைதானங்கள், வளாகத்தின் உள்ளே கட்டடப் பகுதிகளை இணைக்கும் விசாலமான சாலைகள். இவைகளுக்கெல்லாம் மேலாக, ஆற்றலும் அனுபவமும் மிகுந்த ஆசிரியர்கள்!

சுற்றிப் பார்க்க வரும் ஒவ்வொரு மாணவனையும் ஈர்த்து, 'நாமும் இங்கு சேர்ந்து பயில வேண்டும்' என்கிற எண்ணத்தை இந்த பிருந்தாவனம் உருவாக்குவதில் என்ன ஆச்சரியம் இருக்கக் கூடும்?

# கல்லூரி!







ஸ்டூடண்ட் ஸ்டோரி–1

# தலை மேலே வெற்றி குல்லா!

செம்பட்டி - மதுரை மாவட்டத்தில் ஒரு சிறு கிராமம். ப்ளஸ் டு தேர்ச்சி பெற்று விட்டு, தன்னெதிரே வந்து நிற்பவனைப் பார்த்து, எரிச்சலாக இருந்தது அறுபது வயது அழகர்சாமிக்கு. அவனவன் படித்து விட்டு ஐ.ஐ.டி.போகணும், பாலிடெக்னிக் படிக்கணும், ஆபீசர் ஆகணும், இன்ஜினீயரா வரணும் அப்பிடின்னு அலைஞ்சுகிட்டு இருக்கற நேரத்துல, தன்னோட மகன் பாண்டியராஜ் சொன்னதைக் கேட்டதும் பொக... பொசுன்னு கோவம் தான் வந்தது அவருக்கு.



ஆங்கிலப் புத்தகங்களில் வெளி வந்திருந்த வண்ணப்படங்களை விவரித்துக் கொண்டிருந்தான் பாண்டியராஜ். ''ஏன்டா... போக்கத்தவனே. காந்தி குல்லா... கறுப்பு குல்லா... குரங்கு குல்லா பார்த்திருக்கேன். இது என்னடா... தலை மேலே ஒண்ணரை உயரத்துக்கு ஒரு குல்லா. கையில கரண்டி? சமையலைக் கத்துக்க ஏன்டா நீ காலேஜுக்குப் போவணும்? பேசாம ஒங்க ஆத்தாகிட்டயே கத்துக்கலாமேடா.'' அழகர்சாமியின் குரல் ஓங்கியது.

''நம்ப வூட்ல சோறு தண்ணி ஆக்குற மாதிரி இல்லேப்பா அது!'' என்று தொடங்கி, பெரு நகரங்களின் நட்சத்திர ஓட்டல்களில் வேலை வாய்ப்பு, வெளிநாட்டு பிரபல நட்சத்திர ஓட்டல்களில் உடனடி உயர்வு நிலைகள், சமையல் கூடத்தில் மட்டுமே வேலையில்லை என்கிற விபரம், நட்சத்திர ஓட்டல்களில், கேட்டரிங் படித்தவர்கள் பெறுகின்ற ஐந்து மற்றும் ஆறு இலக்க மாதச் சம்பளம், இதர சலுகைகள் பற்றி பக்குவமாகவும் பொறுமையாகவும் எடுத்துரைத்தான்.

'சரிடா' என்று தலையசைத்து, காடு கழனிகளை ஒத்திக்கு வைத்துப் பணம் புரட்டித் தந்தார். இன்று பாண்டியராஜ் பணிபுரிவது அபுதாபி, எமிரேட்ஸ் பேலஸ் ஹோட்டலில் சீனியர் ஷெவுஸ் ஷெப்பாக. ●





சக்சஸ் ஸ்டோரி

# அந்த 7-ல் தொடங்கி...

* எம்.எஸ்.ஷா.

தலைக்கு மேலே பொன்னிற எழுத்துகளில் 'இறைவன் மிகப் பெரியவன்' என்கிற வாசகம் மின்னிக் கொண்டிருக்கிறது. மொபைல் ஃபோனிலிருந்து அழைப்பு ஒன்று துடிக்கிறது? 'இறைவனிடம் கையேந்துங்கள். அவன் இல்லையென்று சொல்லுவதில்லை!' என்று கணீர் குரலில் நாகூர் அனிபா பாடல் ரிங் டோனாக மிதந்து வருகிறது. நொடிப்பொழுதில் தனி மனித மமதைகள் அனைத்தும் நொறுங்கிச் சரிகின்றன. இருகரம் குவித்து நம்மை இன் முகத்துடன் வரவேற்கிறார் எம்.எஸ்.ஷா, நாற்பது வயது இளைஞர். கேட்டரிங் துறையில் (B.H.M.) Bachelor of Hotel.Management பட்டம் பெற்றவர். அன்னை பாத்திமா இன்ஸ்டிடியூட் ஆஃப் கேட்டரிங் அட்மினிஸ்ட்ரேஷன், அன்னை பாத்திமா இன்ஸ்டிடியூட் ஆஃப் ஹோட்டல் கேட்டரிங் அட்மினிஸ்ட்ரேஷன் மற்றும் அன்னை பாத்திமா காலேஜ் ஆஃப் ஆர்ட்ஸ் அன் சயின்ஸ் ஆகிய கல்லூரி நிறுவனங்களின் சேர்மன்.

இனி... அவரது வாய்ஸ்...!

* எம்.எம்.ஹனீஃபா

''கன்னியாகுமரி மாவட்டத்தில் நம்பாளி எனும் கிராமத்தில் பிறந்தவன் நான். பெற்றோர்களுக்கு ஒன்பதாவது குழந்தை. அப்பா முகமது அனிபா. சமூக சேவகர். பாரம்பரிய காங்கிரஸ் தியாகி. அமரர் கல்கி போலவே 'தேச நலன்... தேச நலன்... தேச நலன்!' என்கிற மந்திர வார்த்தைகளை எப்பொழுதும் தம் மனசுக்குள்ளே உச்சரித்துக் கொண்டிருப்பவர். 'ஒரு போதும் உனக்காக மட்டுமே



வாழ்ந்திடாதே.

இந்தச் சமூகத்திற்காக எதையாவது செய்து கொண்டேயிரு!' என்கிற எளிய வார்த்தைகளை என் இதயம் முழுவதுமாக நிரப்பி வைத்தவர். அதன் விளைவாக இயங்கி வருபவையே 'அன்னை பாத்திமா' கல்வி நிறுவனங்கள்.

எனது பள்ளி மற்றும் கல்லூரி நாட்களில், விடுமுறைகளில், என் தந்தை சென்னையில் மிகப் பிரபல நட்சத்திர உணவு விடுதிகளுக்கு என்னை அழைத்துச் செல்வார். உயர்தர ஹோட்டல்களின் கடைநிலை ஊழியர் முதல்



பொது மேலாளர் வரை அனைவரையும் பார்த்துப் பிரமித்துப் போனேன். எத்தனை நாகரிகம்... எவ்வளவு நளினம்... என்னென்ன உபசரிப்பு... என அனைத்தும் கண்டு மலைத்து நின்றேன்.

அந்த சந்தர்ப்பங்கள், நேரில் பார்த்த அந்த அனுபவங்கள் எல்லாம், என் கல்லூரிப் பருவ வாழ்க்கையின் ஒரு திருப்பு முனை எனச் சொல்லலாம். பல் மருத்துவம் பயிலலாம் என்று நினைத்திருந்த நான், கேட்டரிங் துறை பயின்று சிறக்க வேண்டும் என்கிற எண்ணத்தை ஏற்படுத்திக் கொண்டேன்.

தெற்காசியாவிலேயே கேட்டரிங் துறைக்கான பட்டப் படிப்புகள், 1986-ல் தான் முதன்முதலாகத் துவங்கப்படுகிறது. கர்நாடகாவின் மணிப்பால் நகரில் இயங்கி வந்த ஐடிசி வெல்கம் குருப் கிராஜுவேட் ஸ்கூலின் கேட்டரிங் துறையில் 1987-ல் மாணவனாகச் சேர்கிறேன். 1990-ல் (B.H.M.) Bachelor of Hotel Management பட்டம் பெறுகிறேன்.

அதன் பின்னர் ஒரு வருடம் சென்னை, ஸீமா குருப் ஆஃப் ஹோட்டல் மேனேஜ்மென்ட் டிரெய்னிங்ல பல்வேறு பணிகள்; குவைத்தில் அல் ஸலாம் மருத்துவமனையின் கேட்டரிங் மேனேஜராக ஆறு மாதம்; திரும்பி வந்து மீண்டும் கொடைக்கானல் கேட்டரிங் காலேஜில் துணை முதல்வர்.

**த**மிழகத்தில் 1992-களில் கேட்டரிங் துறைக்கென நான்கைந்து கல்லூரிகள் மட்டும்தான் இயங்கி வந்தன. இத்துறை சார்ந்த படிப்புகள் மீது



பெற்றோர்களிடம் விழிப்புணர்வும், தமிழகத்தில் போதிய அறிதலும் இல்லாதிருந்த காலம் அது. அப்பொழுது தான் எனக்குள் சிறு மின்னல் 'பளிச்' எனத் தோன்றியது.

இந்தியாவின் பெரு மற்றும் சிறு நகரங்கள் என்றில்லாது, வெளிநாடுகள் பலவற்றிலுமாக உலகளாவிய வேலை வாய்ப்புகளுக்கு உத்தரவாதமாகத் திகழக் கூடிய கேட்டரிங் துறைக்கென ஒரு கல்லூரியினை நாமே நிறுவி இயக்கினால் என்ன என்கிற எண்ணம் எனக்கு வந்தது. உடனே, அன்னை பாத்திமா கல்வி அறக்கட்டளை உருவானது. 1992-ல் என்னைச் சேர்மனாகக் கொண்டு, அன்னை பாத்திமா கல்லூரி இயங்கத் தொடங்கியது. அப்பொழுது எனக்கு வயது இருபத்தியெட்டு.

**ம**துரை, எஸ்.எஸ். காலனியில் வெறும் ஏழு மாணவர்களுடன் கேட்டரிங் காலேஜ் இயங்கத் துவங்கியது. கல்லூரி தொடங்கிய இரண்டு வருடங்களில் எனக்குத் திருமணம் ஆனது. என் மனைவி திருமதி. ஷகிலா ஷா. அன்னை பாத்திமா கல்வி அறக்கட்டளையின் பொருளாளர். எனக்கு சிறந்த வழிகாட்டி!

எஸ்.எஸ். காலனியிலிருந்து மதுரை பெத்தேல் நகருக்கு கல்லூரி இடம் பெயர்ந்து எட்டு வருடங்கள் அங்கு இயங்கி வந்தது. கல்லூரி நன்கு வளர்ச்சி பெற்றது. இன்னும் அதிகமாக இடம் வேண்டி, மீண்டும் வேறிடம் நோக்கிப் பெயர்ந்தது அன்னை பாத்திமா கல்லூரி.

மதுரை மாவட்டம் ஆலம்பட்டி கிராமம் அருகே, பாத்திமா நகரில், 2002லிருந்து அறுபது ஏக்கர் பரப்பளவில் செயல்பட்டு வருகின்றன அன்னை பாத்திமா கல்வி நிலையங்கள். கடந்த பதினான்கு வருடங்களில் கேட்டரிங் துறையில் இங்கு பயின்ற பலரும், இந்தியப் பெரு நகரங்களில் மட்டமல்லாது பல்வேறு வெளிநாடுகளில் வேலை வாய்ப்புகள் பெற்று பணிபுரிந்து வருகின்றனர். உலகின் மிகப் பிரபல முன்னணி ஹோட்டல் நிறுவனங்கள் பலவும், எங்கள் மாணவர்களை கல்லூரிக்குள் வந்து நேர்முக வளாகத் தேர்வுகள் நடத்தி, அவர்களுக்கு உடனடி வேலை வாய்ப்புகளை அள்ளித் தருகின்றன'' என்று சொல்லி முடிக்கையில் எம்.எஸ்.ஷா முகத்தில் வெற்றி பெருமிதம்!



சூப்பர் ஜாப்

# கடலில் கலக்... ஆகாயத்தில் ...

கேட்டரிங் படிச்சவங்களுக்கு கப்பல்ல என்ன வேலைன்னு உங்களுக்குத் தோணலாம்.

கப்பல்கள் **சரக்கு கப்பல், பயணிகள் கப்பல், உல்லாசக் கப்பல்** என மூன்று வகைப்படும். இதில் சரக்கு கப்பல்களில் அதன் பணியாளர்கள் மற்றும் கப்பல் அதிகாரிகள் மட்டுமே இருப்பர்.

தற்போது ஒரு நாள் அல்லது அதிகபட்சமாகப் போனால் இரண்டு நாள் பயணங்களைத்தான் பயணிகள் கப்பலில் பலரும் விரும்புகிறார்கள். இதில் கேட்டரிங் படித்தவர்களுக்கு வேலை வாய்ப்புகள் மிதமாக உண்டு. ஆனால், கேட்டரிங் படித்தவர்களுக்கு இதனைக் காட்டிலும் அபரிமிதமான வேலை வாய்ப்பு உல்லாசக் கப்பலில் காத்திருக்கிறது.

உல்லாசக் கப்பல்களை க்ரூய்ஸ் லைனர் (Cruise Liner) எனக் குறிப்பிடுகின்றனர். கடந்த பதினைந்து ஆண்டுகளில் உலகம் முழுவதுமாக உல்லாசக் கப்பல்களின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்துள்ளது.

இவைகளில்தான், கேட்டரிங் பயின்றவர்களுக்கு பலவித வேலைகள் குவிந்துக் கிடக்கிறது. பத்து மாடி அடுக்குகள் கொண்ட உல்லாசக் கப்பல்களும் இருக்கின்றன. பொதுவாக உல்லாசக் கப்பலின் உள்ளே, உலகின் நவீன மினி நகரம் ஒன்றே உருவாக்கப்பட்டிருக்குமாம். ஆயிரத்துக்கும் மேற்பட்ட விதவிதமான அறைகள், மருத்துவமனை, நீச்சல் குளம், மினி திரையரங்கம், விளையாட்டு மைதானம், இவைகளுடன் பல்லாயிரக்கணக்கான பயணிகள்!

இவர்களின் உணவுத் தேவைகளுக்கு ஷிப்பிங் ரெஸ்டாரெண்ட் உல்லாசக்



கப்பலின் உள்ளேயே! கேட்டரிங் படித்தவர்களுக்கு குறைந்த பட்சம் அறுபதாயிரம் ரூபாயிலிருந்து லட்சக்கணக்கான ரூபாய் வரையிலான மாதச் சம்பளம் மற்றும் பலப்பல சலுகைகள் கிடைத்து வருகிறது. (சலுகைகள் சம்பளத்தை விட அதிகமாக இருக்குமாம். வருமான வரியும் கிடையாதாம்.)

Ship Director என்கிற கப்பல் இயக்குனர் பணிக்கு, கேட்டரிங் பயின்றவர்கள் மட்டுமே தேர்வு செய்யப்படு கின்றனர்.

என்ன... கப்பல் வேலைக்குப் போகலாம்னு கேட்டரிங் படிக்க கிளம்பிட்டீங்களா?

### ஏர்லைன்ஸ் கேட்டரிங்!

உலகின் பல்வேறு நாடுகளிலும் விமானப் போக்குவரத்து வெகுவாக அதிகரித்துள்ளது. கேட்டரிங் படித்தவர்களுக்கு, விமானப் போக்குவரத்துத் துறையிலும் வேலை வாய்ப்புகள் விசாலமாகக் கதவுகளைத் திறந்து வைத்துள்ளன. இதில் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. ஒன்று விமான நிலைய கேட்டரிங் (AIRPORT CATERING). இன்னொன்று விமான கேட்டரிங் (FLIGHT CATERING).

உள்நாடு மட்டுமல்லாது சர்வதேச விமானங்களிலும் அதன் கேட்டரிங் பயின்றவர்களே பணிபுரிந்து வருகின்றனர். இவைகளுக்கு தேர்வு செய்வதில் TAJ FLIGHT KITCHEN, AMBSSADAR SKY CHEF, OBERAY FLIGHT KITCHEN ஆகிய மூன்று நிறுவனங்கள் முன்னணியில் உள்ளன.

மேற்கண்ட நிறுவனங்களின் நேர்முக வளாகத் தேர்வுகள், அன்னை பாத்திமா



கல்லூரியில் நடைபெறுகின்றன.

### இராணுவத்தில் கேட்டரிங்!

இந்திய ராணுவம் கேட்டரிங் படித்த நபர்களை பணிக்குத் தேர்வு செய்யும் நோக்கில், சமீபத்தில் வேலை வாய்ப்பு அறிவிப்பு ஒன்றினை வெளியிட்டுள்ளது. அவர்கள் கேட்டரிங் பிரிவில் ஜூனியர் கமிஷன் ஆபீர்களாகப் பணிபுரிவார்கள். பணியிடங்கள் அனைத்தும் ஆண்களுக்கானது.

கேட்டரிங் படிச்சுட்டு உடல் பலமில்லாம இருந்தா நோ என்ட்ரி. இராணுவப் பணிக்கான மருத்துவ தகுதிகள் இருக்கணும். உடல் தகுதியில் தேர்ச்சி பெற்றால்தான், அடுத்து எழுத்துத் தேர்வு.

அங்கீகரிக்கப்பட்ட புட் கிராப்ட் இன்ஸ்டிடியூட், அகில இந்திய தொழில் நுட்பக் கழகம், பல்கலைக்கழகங்கள் இவைகளில் ஏதேனும் ஒன்றின் அனுமதியளிக்கப்பட்ட கேட்டரிங் கல்வி நிறுவனச் சான்று மிக அவசியம். ●





ஸ்டூடண்ட் ஸ்டோரி-2

# கூலி வேலை to கேட்டரிங்

திருநெல்வேலி அருகே ஆலங்குளம் கிராமம். செல்வகுமார்! அப்பா இல்லை, அம்மா மற்றும் அண்ணன் இருக்கிறார்கள். ப்ளஸ் டூ படித்து தேர்ச்சிப் பெறுகிறார். மேற்படிப்பு படிக்க விருப்பம். வீட்டுப் பொருளாதாரம் அவரை வேலைக்குப் போக வைக்கிறது. தூத்துக்குடி துறை முகத்தில் கூலி வேலை கிடைக்கிறது. ஒரு வருடம் வேலை பார்க்கிறார். அந்த வேலையிலிருந்து விடுபட்டு, வேறு ஏதேனும் படித்து வேலைக்குச் செல்ல வேண்டுமென எண்ணுகிறார்.

அம்மாவையும் அண்ணனையும் அழைத்துக் கொண்டு, அன்னை பாத்திமா கல்லூரிக்கு வருகிறார். கையிருப்புப் பணம் போதவில்லை. ஊருக்குத் திரும்பிச் சென்று கடன் வாங்கப்படுகிறது. பணம் சேர்ந்தவுடன் மதுரை வந்து கேட்டரிங் காலேஜில் சேர்ந்து கொள்கிறார். இந்த வருடம் ஊரில் அக்கம் பக்கம் கடன் வாங்கி கட்டியாகிவிட்டது, தொடரும் இன்னும் இரண்டு வருடங்களுக்கு என்ன செய்வது? வருடா வருடம் தொடர்ந்து நமக்கு யார் கடன் கொடுப்பார்கள்? என்கிற பெருங்கவலை வந்தது.

அப்பொழுது அவர்களுக்கு வழி காட்டியது கல்லூரி நிர்வாகம். அவரது சேர்க்கை விபரம், கல்விக் கட்டணம், பட்டப் படிப்பு தகவல் போன்றவற்றைக் குறிப்பிட்டு, வங்கிக் கடனுக்கென விபரக் கடிதம் தந்தது நிர்வாகம். வங்கிக் கடனுதவி பெற்று, முதலாமாண்டு பெற்றிருந்த வெளிக் கடன்களை அடைத்து விட்டு, தற்போது இரண்டாமாண்டு வங்கிக் கடன் பெற்று கொள்ளவும் தயாராகி உள்ளார் செல்வகுமார். வரவிருக்கும் கல்வி யாண்டில், இளங்கலை உணவக மேலாண்மை மற்றும் சமையல் அறிவியலின் இரண்டாமாண்டு மாணவர் அவர்.

பொருளாதார நிலையில் பின்தங்கிய மாணவர்களுக்கு (அவர்களிடம் உடனடி பணம் இருக்காது. ஆனால் அசையா சொத்துக்கள் இருக்க வேண்டும்.) வங்கி கடனுதவி பெற்றிட வழி காட்டுகிறது கல்லூரி நிர்வாகம்.

இங்கு கேட்டரிங் பயின்று வரும் மொத்த மாணவர்களில், இருபத்தைந்து சதவிகிதம் நபர்கள் வங்கிகளில் கடனுதவி பெற்றுள்ளவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.



கலை நுணுக்கம்

# யுவர்

பொதுவாகவே கேட்டரிங் பயில்பவர்களில் பெண்கள் மிகக் குறைந்த சதவிகிதமே. பெற்றோர்கள் தங்களின் பெண் பிள்ளைகளை, கலை மற்றும் அறிவியல் கல்லூரிகளில் சேர்த்து விடுவதில்தான் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். வீட்டிலும் சமையல்கட்டு, கல்லூரியிலும் சமையல் கட்டா என்கிற ஆதங்கமா... அலுப்பா?...

கேட்டரிங் என்றாலே, சமையல் செய்வது-சமையல் கூடத்தில் மட்டுமே உழல்வது என்பதில்லை. கேட்டரிங் படிப்பில் சமையல் செய்வது என்பது ஒரு பகுதி அவ்வளவுதான்! அதனைத் தொடர்ந்து, இணைப்புச் சங்கிலி போல பல்வேறுபட்ட பகுதிகள் கொண்டது தான் கேட்டரிங் படிப்பு.

உணவகங்களில் பரிமாறும்போது உண்பவரின் வலது புறம் நின்று பரிமாறுவதா? இடது புறம் நின்று பரிமாறுவதா? என்பதற்குக் கூட பயிற்சி உண்டு. குறிப்புணர்ந்துப் பரிமாறுதல், உண்பவரின் உணர்வறிந்து பரிமாறுதல், இன்முகத்துடன் பரிமாறுதல், என்று பல பயிற்சிகள் இருக்கின்றன. உபசரிப்பு இதில் முக்கிய இடம் வகிக்கிறது.

சூப்பர்வைசர், ஹவுஸ் கீப்பர், ஷிஃப்ட் இன்சார்ஜ், டெமி செஃப், ப்ராடக்ட் அப்ளிகேஷன் சூபர்வைசர், மேலாளர் மற்றும் பொது மேலாளர் என பல நிலைகளில் படிப்படியான பதவி உயர்வுகளில் கேட்டரிங் துறையில் பணிகள் அனைத்தும் பெண்கள் - ஆண்கள் என இருபாலருக்கும் காத்திருக்கின்றன.

கேட்டரிங் படித்துவிட்டு சமையல் கூடத்தில் செஃப் ஆக பணிபுரிபவர்கள் மட்டுமே, தலையில் உயரமான தொப்பி



● உலகின் மிகப் பிரபல நட்சத்திர ஓட்டல்கள் தங்களின் பணிகளுக்காக, ஆண்டுதோறும் அன்னை பாத்திமா கல்லூரிக்கு வருகை தந்து நேர்முக வளாகத் தேர்வுகள் நடத்தி, உடனடி வேலை வாய்ப்புகளை அளித்து வருகின்றன.



- வெள்ளை பேன்ட், சர்ட் மற்றும் சட்டை முன் பகுதியில் லைட் புளூ மறைப்புத் துண்டினை அணிந்துக் கொள்ள வேண்டும். இதனை 'செஃப் யூனிஃபார்ம்' என்கிறார்கள்.

சமையல்கூடம் தவிர மற்ற பகுதி களில் பணிபுரிபவர்கள், கறுப்பு பேன்ட், வெள்ளை சர்ட், கழுத்தில் டை அணிந்து காலில் ஷுவுடன் இருக்க வேண்டும். இதனை கேட் டரிங் துறை யில் 'ரெகுலர் யூனிஃபார்ம்' என குறிப்பிடுகிறார்கள்.

தமிழகத்தில் கேட்டரிங் பயில்பவர் களில் ஆண்கள்தான் வெகு அதிகம்.

# அட்டென்ஷன் லேடீஸ்!



பெண்கள் மிகக் குறைவு. மாணவி களின் பங்களிப்பு அதிகம் வர வேண்டும் என்பது கேட்டரிங் துறையினரின் எதிர்பார்ப்பு.

- உலகின் முன்னணியில் இருக்கும் (ஓட்டல் துறையில்) பெரிய நிறுவனங் களில், பதினெட்டு, இங்கு வந்து நேர்முக வளாகத் தேர்வுகள் நடத்துகின்றன.

தாஜ் குரூப், வெல்கம் குரூப், ஒபராய் குரூப், அம்பாசிடர் குரூப், லீ மெரிடியன், ஜி.ஆர்.டி.குரூப், மஹேந்திரா கிளப், டோமினோஸ் பீஸா, ஸ்டெர்லிங் ரிசார்ட்ஸ் போன்ற இன்னும் பல நிறுவனங்கள்..

நூறு சதவிகித வேலை வாய்ப்பு உறுதி!



# படிக்க நிறைய பட்டியல்

அன்னை பாத்திமா கல்லூரியில்
மட்டுமே கற்றுத் தரப்படும் படிப்புகள்:

## I. சான்றிதழ் படிப்புகள்:

★ உணவு தொழில்நுட்பத் தயாரிப்பு
★ ஹோட்டல் நிர்வாகப் பயிற்சி
★ உணவுப் பரிமாறுதல்
★ ஹோட்டல் வரவேற்பாளர் பயிற்சி. இவை அனைத்தும் ஒரு வருட சான்றிதழ் படிப்புகள். கல்வித் தகுதி: பத்தாம் வகுப்பு தேர்ச்சி.
★ ஹோட்டல் நிர்வாகம் மற்றும் உணவக அறிவியல். இதுவும் ஒரு வருட சான்றிதழ் படிப்பு. கல்வித் தகுதி: மேனிலைப் பள்ளி தேர்ச்சி

●●●

## II. பட்டய படிப்புகள்:

★ DHMCT - பட்டயம். மூன்று வருடம். (Diploma in Hotel Management And Catering Technology).
★ மத்திய அரசின் AICTE அங்கீகாரம் பெற்றிருந்தால் மட்டுமே, DHMCT பட்டயப் படிப்பு கற்றுத்தர முடியும்.
★ கல்வித் தகுதி: மேனிலைப் பள்ளி தேர்ச்சி.
★ பதினாறு வகை பாடப்பிரிவுகள் உள்ளடக்கி யது.
★ ஹவுஸ் கீப்பிங், உணவுத் தயாரிப்பு, உணவுப் பரிமாறுதல், Front Office என நான்கு முக்கியப் பாடப் பிரிவுகள்.
★ சட்டம், பொருளாதாரம், பிரெஞ்சு மொழி,



# இருக்கு!

பொது ஆங்கிலம், கணக்கு இயல், ஊட்டச் சத்து இயல், சுத்தம் மற்றும் சுகாதார இயல் போன்ற பாடங்கள்.

★ இவைகளில் பிரெஞ்ச் மொழி ஏன் என்கிற கேள்வி எழலாம்! உலகளாவிய கேட்டரிங் துறைகளில் பிரெஞ்ச் மொழி கற்றுக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

★ கேட்டரிங் படிப்பில் - சட்டம் குறித்த வகுப்புகள் நடத்துவதற்கு, நோட்டரி பப்ளிக் வழக்கறிஞர் ஒருவர் பகுதி நேர ஆசிரியராக பணியமர்த்தப்பட்டிருக்கிறார்.

●●●

## III. இளங்கலை படிப்புகள்: (பட்ட படிப்பு)

★ மூன்று வருட பட்டப் படிப்பு.
★ கல்வித் தகுதி: ப்ளஸ் டூ தேர்ச்சி.
★ B.Sc., H.M.& C.S., (B.Sc., Hotel Management & Catering Science)
★ கம்ப்யூட்டர் கோர்ஸும் இதில் உண்டு.

★ B.Sc., T&H.M. மூன்று வருட பட்டப் படிப்பு.
★ கல்வித் தகுதி: ப்ளஸ் டூ தேர்ச்சி.
★ B.Sc., T&H.M. (B.Sc., Tourism & Hotel Management)
★ இதனைப் பயின்றவர்கள், நட்சத்திர ஓட்டல்களிலும் வேலைக்குச் சேரலாம். சுற்றுலாது துறையிலும் வேலைக்குச் சேரலாம்.
★ கம்ப்யூட்டர் கோர்ஸும் இதில் உண்டு.

★ B.Sc., T&H.M என்கிற மூன்று வருட பட்டப் படிப்பு - தமிழகத்திலேயே அன்னை பாத்திமா கேட்டரிங் கல்லூரியில் மட்டுமே இருக்கின்றது.

●●●

## IV. முதுகலை படிப்பு. (பட்ட மேற்படிப்பு)

★ பல்கலைக்கழக அங்கீகாரம் பெற்றது.
★ இதற்கு கேட்டரிங் துறையில் B.Sc., தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.
★ இரண்டு வருட பட்ட மேற்படிப்பு இது.
★ M.Sc., H.M. & C.S., (M.Sc., Hotel Management & Catering Science)









சொல்றாங்க

ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் மிகவும் உயர்ந்த பதவிகள் பொது மேலாளர், துணைத் தலைவர் போன்றவைகள். இந்த இரு பதவிகளுக்குமே, கேட்டரிங் பயின்று வேலைக்குச் சேர்ந்து படிப்படியாக பதவி உயர்வு பெறுபவர்களே வந்தமர்கிறார்கள்.



* மோகன் குமார்

மேலான, அந்நிறுவனத்தின் பொது மேலாளர் பதவிக்கு கேட்டரிங் பயின்றவர்கள் மட்டுமே பணி மூப்பு மற்றும் அனுபவம் வாயிலாக தேர்வு செய்யப் படுகின்றனர்'' என்கிறார் கேட்டரிங் கல்லூரியின் ஆசிரியர் அண்ணாமலை.

''கேட்டரிங் பயிலும் மாணவர்கள், கல்லூரி விட்டு வெளி உலகம் செல்லும்போது வேலை வாய்ப்புடன் கிளம்புகின்றனர். தன் சொந்த பலத்தில் பொருளாதார உயர்வு பெறுகிறார்கள். வீட்டுக்கும் பயன்படுகிறார்கள். அவர்களது வாழ்க்கைத் தரமும் உயர்கிறது. கேட்டரிங் படித்தால் வேலை கிடைக்குமா கிடைக்காதா என்கிற கவலை கொள்ளத் தேவையில்லை'' என சொல்கிறார் கேட்டரிங் கல்லூரி யின் முதல்வர் (பொறுப்பு) மோகன் குமார்.

# வாருங்கள் வெல்வோம்!

பிரபல உணவு விடுதிக் குழுமங்களில், மருத்துவம் பயின்றவர்கள் House Doctors ஆகவும், பொறியியல் படித்தவர்கள் Maintenance Engineersஆகவும் பணியாற்றுவார்கள். ஆனால், அவர்களுக்கும்



* அண்ணாமலை

தொகுப்பு:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு
படங்கள்:
எம்.டி.பாலசந்தர்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

27.5.2007

இதழுடன் இணைப்பு
16 பக்கங்கள்

+16

## கை மணக்கும் கலை!

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMGs Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 27.5.2007



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No. TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.